# யாப்பருங்கலம்






தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்

சரசுவதி மகால் வெளியீட்டு எண். 417

அமிதசாகரனார் இயற்றிய

# யாப்பருங்கலம்

பதிப்பாசிரியர் :

**ய. மணிகண்டன்,** எம். ஏ., எம். ஃபில்.,

*முன்னாள் தமிழ்ப் பண்டிதர்,*

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்,**

*தஞ்சாவூர்.*

2005

விலை : ரூ. 50-00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | யாப்பருங்கலம் |
| நூலாசிரியர் | : | அமிதசாகரனார் |
| பதிப்பாசிரியர் | : | ய. மணிகண்டன், எம். ஏ., எம். ஃபில்., |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : | 417 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | செப்டம்பர், 2005 |
| தாள் | : | TNPL 11.8 கி. கி |
| நூல் அளவு | : | 24 x 18 செ. மீ. |
| பக்கங்கள் | : | 118 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | யாப்பு இலக்கணம் |
| விலை | : | ரூ. 50-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

ஒரு மொழி செறிவுபெற்ற செம்மொழியாகத் திகழவேண்டுமாயின் அம்மொழிக்கு வளம்சார்ந்த இலக்கண நூல்கள்தான் அடிப்படையாக விளங்குதல் வேண்டும். அவ்வகையில் உலகத் தொன்மொழிகளுள் ஒன்றான தமிழ்மொழி இலக்கிய வளத்தால் மட்டுமின்றி இலக்கண வளத்தாலும் ஈடுஇணையற்ற தனிமொழியாக விளங்குகின்றது.

தமிழணங்கு சூடியுள்ள எண்ணற்ற அணிகலன்கள் வரிசையில் அமிதசாகரனார் இயற்றிய யாப்பருங்கலம் எனும் நூலும் ஒன்றாகும். சரசுவதி மகால் நூலகத்தின் மேனாள் தமிழ்ப் பண்டிதரும், சென்னைப் பல்கலைக்கழகத்து தமிழ் இலக்கியத்துறைப் பேராசிரியருமான முனைவர். ய. மணிகண்டன், சரசுவதி மகால் நூலகத்து ஏட்டுச்சுவடியான யாப்பருங்கலத்தை மிகச்சிறப்பாகப் பதிப்பித்துள்ளார். தமிழ்த்தாத்தா உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் கற்றுத்தந்த பதிப்பு நெறியை அடியொற்றி இவ்விலக்கண நூலும் செம்மையாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. பதிப்பாசிரியருக்கு என் பாராட்டுக்கள்.

இந்நூல் சிறப்புற வெளிவரத் துணைநின்ற சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திரு. இரா. சுப்பிரமணியன், வெளியீட்டு மேலாளர் முனைவர். குடவாயில் பாலசுப்ரமணியன் ஆகியோருக்கும், பதிப்புத்துறை பணியாளர்களுக்கும் என் பாராட்டுக்கள்.

இந்நூலினை அச்சிட நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**மா. வீர சண்முக மணி,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
20-9-2005

17. சீரோடு சீர் கூடிநிற்பது தளை எனப்படும். அவை ஏழு வகைப் படும்.

18. வெண்பா உரிச்சீர் நின்று தன் வரும்சீர் முதலசையோடு ஒன்றலும், இயற்சீர் நின்று தன் வரும்சீர் முதலசையோடு ஒன்றாததும் என வெண்டளை இயல்பாவன இரண்டு வகைப்படும.

19. இயற்சீர் நின்று வரும் சீர் முதலசையோடு நேரசை ஒன்றுவதும், நிரையசையாய் ஒன்றுவதும் என ஆசிரியத்தளை இருவகைப்படும்.

20. நேர் ஈறாகிய உரிச்சீர் முன்னர் நிரையசை வரும் சீருக்கு முதலாய் வரின் கலித்தளை ஆகும்.

21. வஞ்சியுரிச்சீரின் இறுதி வரும் சீர் முதலசை நிரையசையாய் வரவும் நேரசையாய் வரவும் வஞ்சித்தளை இரண்டு வகைப்படும்.

22. வெண்பாவினுள் வெண்டளை அன்றி வேற்றுத்தளை வந்து மயங்கா; மற்று ஒழிந்த பாவிடத்தும் பாவினத்திடத்தும் வேற்றுத்தளையும் மயங்கியும் வரப்பெறும்.

23. குறளடியும் சிந்தடியும் அளவடியும் நெடிலடியும கழிநெடிலடியும் என ஐந்து திறத்தன அடி.

24. இரு சீர்களால் அமைவது குறளடியாகும். மூச்சீர்களால் அமைவது சிந்தடியாகும். நான்கு சீர்களால் அமைவது அளவடியாகும். ஐந்து சீர்களால் அமைவது நெடிலடியாகும்.

25. அறுசீர் முதலா ஒன்றுதலைச் சிறந்து பத்துச்சீர் இறுதியாக வரும் அடியெல்லாம் கழிநெடிலடி எனப்படும்.

26. சிந்தடியாலோ குறளடியாலோ வஞ்சிப்பா நடக்கும்.

27. கலிப்பாவும் வெண்பாவும் ஆசிரியப்பாவும் அளவடியால் நடக்கும்.

28 குறளடி முதலிய எல்லா அடியானும் பாவினங்கள் நடக்கும்.

யாப்பருங்கல நூற்பாக்களில்

# இடம்பெற்றுள்ள செய்திகள்

*[விருத்தியுரையின் ' இதன்பொருள் ' எனும் பகுதியின் தொடர்களைப் பயன்படுத்தியும், அப்பகுதியை அடியொற்றியும்.]*

**பாயிரம்** குணசாகரர் என்பவரின் கொள்கையின் வழுவாது செல்லும் அமிதசாகரரால் இயற்றப்பட்டது 'யாப்பருங்கலம்' எனும் இந்நூலாகும்.

**சிறப்புப் பாயிரம்** தாமரை மலரின்மேல் நடந்த இறைவனை வணங்கி யாப்பிலக்கணங் கூறத் தொடங்கல்.

**நூ. 1** எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, தூக்கு எனும் ஏழு உறுப்புகளைக் கொண்டு அமைவது யாப்பிலக்கணமாகும்.

2 அசைக்கு உறுப்பாகும் எழுத்து வகைகள் பதினைந்து ஆகும். அவையாவன: 1) உயிர் 2) மெய் 3) உயிர்மெய் 4) குறில் 5) நெடில் 6) அளபெடை 7) வல்லினம் 8) மெல்லினம் 9) இடையினம் 10) குற்றியலிகரம் 11) குற்றியலுகரம் 12 ஆய்தம் 13) ஐகாரக்குறுக்கம் 14) ஔகாரக்குறுக்கம் 15) மகரக்குறுக்கம்.

3 அளபெடையாக வருமிடத்தில் மட்டுமே ஆய்தமும் ஒற்றும் அலகு பெறும். பிற இடங்களில் ஆய்தமும் ஒற்றும் தாமாக அலகுபெறா.

4. தளையும் சீரும் வண்ணமும் சொன்ன இலக்கணத்தோடு மாறு கொள்ள வருமானால் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் உயிரளபெடையும் அலகுபெறா.

5 நேரசை, நிரையசை என அசை இருவகைப்படும்.

6 நெடில் எழுத்தும் குறில் எழுத்தும் தனித்துவந்தும் ஒற்றடுத்து வந்தும் நால்வகைகளாக நேரசை அமையும்.

7 சீரின் முதலில் குறில் தனித்துநின்று நேரசை ஆகா. குறிப்பு, ஏவல், தற்சுட்டு ஆகச் சீர்முதற் குறில் எழுத்து அமைகையில் மட்டும் தனித்துநின்று நேரசை ஆகும்.

8 குறில் இரண்டு இணைந்தும், குறில்நெடில் இணைந்தும், குறிலிணை ஒற்றடுத்தும், குறில் நெடில் இணை ஒற்றடுத்தும் நால்வகைகளாக நிரையசைகள் அமையும்.

9 சீர்க்கு இடையிலும் இறுதியிலும் நின்ற ஐகாரம், ஐகாரத்தோடு இணைந்தும் நிரையசையாகும். ஐகாரம் குறிலெழுத்தே போல நின்று மற்றோர் எழுத்தோடு இணைந்து நிரையசையாகும்.

10 இயற்சீர், உரிச்சீர், பொதுச்சீர் எனச் சீர் மூன்றுவகைப்படும்.

11 இரண்டசைகள் இணைந்து நின்றது 'இயற்சீர்' எனப்படும். அவ்வியற்சீர் நான்கு திறத்தன (நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரை) ஆகும்.

12. மூவசைச்சீர் உரிச்சீர் எனப்படும். மூவசையாலாகிய உரிச்சீர் எட்டு வகைப்படும். அவற்றுள் நேரசை இறுதியாகிய நான்கும் வெண்பா உரிச்சீர்களாகும்; நிரையசை இறுதியாகிய நான்கும் வஞ்சி உரிச்சீர்களாகும்.

13. நாலசையாலாகிய சீர் பொதுச்சீர் எனப்படும். அப்பொதுச்சீர் பதினாறு திறத்தன ஆகும்.

14. ஓரசைச்சீரும் பொதுச்சீர் எனப்படும். அது இரண்டு வகைப்படும்.

15. இயற்சீரும் உரிச்சீரும் செய்யுளில் மயங்கியும் பொதுச்சீர் அருகியும் இயற்சீரும் உரிச்சீரும் வேறுவேறே ஆகியும் செய்யுளகத்து வரும். நிரையீறாகிய நாலசைப் பொதுச்சீர் எட்டும் வஞ்சிப்பாவினுள்ளே வரும்; வஞ்சியுரிச்சீர் வெண்பாவினுள் வரப்பெறாதும், அவ்வாற்றால் நடைபெறும் மூன் கூறப்பட்ட சீர்கள்.

16. நேர் நடுவாகிய வஞ்சி உரிச்சீர் கலியுள்ளும் ஆசிரியத்துள்ளும் வரப்பெறும்.

29. ஈரசைச் சீராலாகிய வெண்பா அடியும் வஞ்சி அடியும் என இவற்றைத் தமக்கு அடியாகக்கொண்டு நடக்கும் ஒருசார் ஆசிரியப்பாக்களும் உள.

30. வெண்பா அடி ஒருசார்க் கொச்சகக் கலிப்பாவினுள் மயங்கவும் பெறும்.

31. வஞ்சிப்பாவினுள் ஆசிரிய அடி விரவவும் பெறும்.

32. ஈரடி, வெண்பாவிற்குச் சிறுமை; மூன்றடி, ஆசிரியப்பாவிற்கும் வஞ்சிப்பாவிற்கும் சிறுமை; கலிப்பாவிற்கு நான்கடி சிறுமையாகும்.

33. தொடை என்பது அடி இரண்டு இயைந்தவழிப் பெறப்படும்.

34. மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை ஆகிய ஐந்தும் தொடை வகைகளாகும். அடி, இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று ஆகிய எட்டும் தொடை விகற்பங்களாகும்.

35. முதலடி முதற்கண் வந்த எழுத்தே எல்லா அடிமுதற்கண்ணும் வரின், அது அடிமோனைத்தொடை எனப்படும்.

36. அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது 'அடியெதுகை' எனப்படும்.

37. வருக்க மோனை, வருக்க எதுகை, நெடில்மோனை, நெடிலெதுகை இனமோனை, இன எதுகை ஆகியனவும் கூறப்படும்.

38. அடிதோறும் சொல்லும் பொருளும் மறுதலைப்படத் தொடுப்பது அடிமுரண்தொடை எனப்படும்.

39. கடையிணைமுரண், பின்முரண், இடைப்புணர்முரண் ஆகியனவும் முரண்தொடை வகைகளாகும்.

40. அடிதோறும் இறுதிக்கண் எழுத்தானும் சொல்லானும் ஒன்றி வருதல் அடி இயைபுத் தொடை எனப்படும்.

**41.** அடிதோறும் அளபெடுத்து ஒன்றிவருதல் அளபெடைத் தொடை எனப்படும்,

**42.** முதல் இருசீர்க்கண்ணும், மேல் அடிக்கண் வரத்தொடுத்தாற்போல மோனை முதலாயின வரத் தொடுத்தால், அவை இணை மோனை, இணை எதுகை, இணை முரண், இணை இயைபு, இணை அளபெடை எனப்படும்,

**43.** முதற்சீர்க்கண்ணும் மூன்றாஞ்சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது, பொழிப்புத் தொடை எனப்படும்.

**44.** நடு இரு சீர்க்கண்ணும் இன்றி, முதற்சீர்க் கண்ணும் நாலாஞ்சீர்க் கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பது ஒரூஉத்தொடை எனப்படும்.

**45.** கடைச்சீர்க்கண் இன்றி, முதல் மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பின், அவற்றைக் கூழைமோனை, கூழை எதுகை கூழை முரண், கூழை இயைபு, கூழை அளபெடை என்று சொல்லப்படும்.

**46.** இரண்டாம் சீர்க்கண் இன்றி, அல்லாத மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுத்தால், மேற்கதுவாய்த் தொடை எனப்படும்.

**47.** மூன்றாஞ்சீர்க்கண் இன்றி, முதல் இருசீர்க் கண்ணும் கடைச்சீர்க் கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுத்தால், கீழ்க்கதுவாய்த் தொடை எனப்படும்.

**48.** நான்கு சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுத்தவை முற்றுத்தொடை எனப்படும்.

**49.** செந்தொடை, இரட்டைத்தொடை, அந்தாதித்தொடை ஆகியன வும் தொடை வகைகளாகக் கூறப்படும்.

**50.** செந்தொடை என்பது, மேற்சொல்லப்பட்ட தொடையும், தொடை விகற்பமும் போலாமை, வேறுபடத் தொடுப்பதாகும்.

**51.** ஓர் அடி முடியும் அளவும் ஒரே சீரே நடப்பது இரட்டைத் தொடை எனப்படும்.

**52.** எழுத்தும், அசையும், சீரும், அடியும் இறுவாய் எழுவாயாகத் தொடுப்பது அந்தாதித்தொடை எனப்படும்.

**53.** ஒரு செய்யுளகத்துத் தொடைபல தொடுத்து வந்தாலும், தளை பல விரவி வந்தாலும், அவற்றை முதல் வந்த தொடையாலும் முதல்வந்த தளையாலும் பெயர் கொடுத்து வழங்கப்பெறும்.

**54.** செய்யுள், பாவும் பாவினமும் என இருவகைப்படும்

**55.** வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா எனப் பா நால்வகைப் படும்.

**56.** தாழிசையும் துறையும் விருத்தமும் என்றிம்மூன்றும் 'பாவினம்' எனப்படும். இவை பாவினோடும் கூடிப் பெயர்பெற்று நடக்கும்.

**57.** வெண்பா செப்பல் இசையைப் பெற்று நடக்கும். அவ்வெண்பா ஈற்றடி முச்சீராகியும், அவ்வீற்றடியின் இறுதி அசைச்சீராகியும் நிற்கப்பெறும்.

**58.** குறள் வெண்பாவும், சிந்தியல் வெண்பாவும், இன்னிசை வெண்பாவும், நேரிசை வெண்பாவும், பஃறொடை வெண்பாவும் என வெண்பா ஐந்து வகைப்படும்.

**59.** இரண்டடியால் வருவது குறள்வெண்பா எனப்படும். மூன்றடியால் வருவது சிந்தியல் வெண்பா எனப்படும்.

**60.** நான்கு அடியாய், தனிச்சொல் இரண்டாம் அடியின் இறுதியாய், அவ்விரண்டாமடி ஒரூஉத் தொடையாய் இரண்டு விகற்பத்தானும் ஒரு விகற்பத்தானும் வருவது நேரிசைவெண்பா எனப்படும்.

**61.** ஒரு விகற்பத்தானும் பல விகற்பத்தானும் தனிச்சொல் இன்றி நான்கடியான் வருவன இன்னிசைவெண்பா எனப்படும்.

**62.** நான்கடியின் மிக்க பல அடியால் வருவது பஃறொடை வெண்பா எனப்படும்.

**63.** ஒழுகிய ஓசையினை உடைத்தாய்த் தம்முள் ஒத்துவந்த இரண்டு அடித்தாய், விழுமிய பொருளைப் பயந்து நிற்பது வெண்செந்துறை எனப்படும்.

**64.** ஈற்றடி குறைந்து வருவனவும், விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் இன்றி வெண்செந்துறையிற் சிதைந்து இரண்டடியும் ஒத்துவருவனவும், செப்பலோசையிற் சிதைந்துவந்த குறள்வெண்பாவும் தாழிசைக்குறள் (குறட்டாழிசை) எனப்படும்.

**65.** மேற்கூறிய வெண்செந்துறையும், தாழிசைக்குறளும் குறள்வெண்பாவின் இனம் எனப்படும்.

**66.** அடிமூன்றாய், ஈற்றடி முச்சீராய், இறுவன வெள்ளொத்தாழிசை, (வெண்டாழிசை) எனப்படும்.

**67.** மூன்று அடி முதலாக ஒன்றுதலைச்சிறந்து ஏழடிகாறும் வந்து, கடைக்கண் ஓரடியும் பல அடியும் ஒரு சீரும் இருசீரும் பலசீரும் குறைந்து, அவை எல்லாம் ஓர் இசையாய் வரினும்; முதல் ஓர் இசையாய்ப் பின் ஓர் இசையாய் வரினும், வெண்டுறையாகும்.

**68.** நான்கு அடியால் வந்து, அடிதோறும் இறுதிக்கண் ஒரு சொல்லே தனிச்சொல்லாய்ப் பொருள்கொண்டு முடியின் வெளிவிருத்தம் எனப்படும்.

**69.** அகவல் இசையைத் தனக்குரிய இசையாய் (ஓசை) உடைய ஆசிரியப்பா ஏ, ஓ, ஈ, ஆய், என், ஐ என்று இறும்.

**70.** நேரிசை ஆசிரியமும், இணைக்குறள் ஆசிரியமும், நிலைமண்டில ஆசிரியமும் அடிமறிமண்டில ஆசிரியமும் என ஆசிரியப்பா நான்காகும்.

**71.** ஈற்றடியின் முதலடி (ஈற்றயலடி) முச்சீரடியான் வந்தன நேரிசை ஆசிரியப்பா எனப்படும்.

**72.** ஈற்றடியின் மேலையடி இரண்டுசீரும் ஒருசீரும் குறைந்து இறுதல் இணைக்குறள் ஆசிரியப்பா எனப்படும்.

**73.** அடிகளை முதல், இடை, கடையாக ஒன்றுக்கொன்று மாற்றியமைத்தாலும் ஓசையும் பொருளும் மாறாது அமைவது அடிமறிமண்டில ஆசிரியப்பா ஆகும்.

74. எல்லா அடிகளும் நான்கு சீர்களைப் பெற்றுவரும் ஆசிரியப்பா நிலைமண்டில ஆசிரியப்பா எனப்படும். இவ்வாசிரியப்பாவில் 'என்' என்பது ஈறாக நிற்கும்.

75. அடி மூன்றாய்த் தம்முள் அளவொத்து இறுவன ஆசிரியத் தாழிசை எனப்படும்.

76. ஈற்றயல் அடி குறைந்து நான்கடியாய் வருவனவும், ஈற்றயல் அடி குறைந்து இடையந்தத்து அடி மடக்காய் நான்கடியாய் வருவனவும், இடையடி குறைந்து நான்கடியாய் வருவனவும், இடையிடை குறைந்து இடைமடக்காய் நான்கடியாய் வருவனவும் ஆசிரியத்துறை எனப்படும்.

77. கழிநெடிலடி நான்காய்த் தம்முள் அளவொத்து முடிதல் ஆசிரிய விருத்தம் எனப்படும்.

78. துள்ளல் இசையைத் தனக்குரிய ஓசையாக உடையன கலிப் பாக்கள். அவை வெண்பாவும் ஆசிரியப்பாவுமாய் இறும்,

79. ஒத்தாழிசைக்கலியும், வெண்கலிப்பாவும், கொச்சகக்கலியும் எனக் கலிப்பா மூவகைப்படும்.

80. நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவும், அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவும், வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவும் என ஒத்தாழிசைக் கலிப்பா மூவகைப்படும்,

81. வெண்கலிப்பா ஒரு வகையாகும். கொச்சகக்கலிப்பா ஐந்து வகைப்படும்.

82. தரவு என்னும் உறுப்பு முதற்கண்ணே வந்து, தாழிசை என்னும் இரண்டாம் உறுப்பும் தம்முள் ஒத்து மூன்றாய் வந்து, தனிச்சொல் என்னும் மூன்றாம் உறுப்பு உடைத்தாய்ச் சுரிதகம் என்னும் நான்காம் உறுப்பு மேற் சொல்லப்பட்ட வெண்பாவானும் ஆசிரியப்பாவானுமாய் வந்து, நிகழ்வது நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா எனப்படும்,

**83.** மேற்கூறிய தாழிசைக்குப் பின்னாய் ஒன்றினுக்கு ஒன்று சுருங்கி வரும் (அம்போதரங்க) உறுப்பினை உடையது அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா எனப்படும்.

**84.** மேற்கூறிய தாழிசை உறுப்புக்குப் பின்னர் அம்போதரங்க உறுப்புக்கு முன்னர் முடுகிநடக்கும் அராக உறுப்பு இடம்பெறுவது வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா எனப்படும்.

**85.** நாற்சீரடிகளாகி அடிதோறும் தன்(கலிப்பாவின்) தளையும், ஓசையும் தழுவிநின்று ஈற்றடி வெண்பாவே போல் முச்சீரால் முடிவது கலிவெண்பாவாகும்.

**86.** தரவே வந்தும், தரவு இரண்டாய் வந்தும், தாழிசை சில வந்தும் தாழிசை பல வந்தும், தரவு முதலாகிய ஆறு உறுப்பும் தம்முள் மயங்கியும் வெண்பாவினோடும் ஆசிரியத்தினோடும் மயங்கியும் வருவன எல்லாம் கொச்சகக் கலிப்பா எனப்படும்.

**87.** அடி சிலவாயும் பலவாயும் வந்து, தத்தமில் ஒத்து, ஈற்றடி மிக்கு வருவன எல்லாம் 'கலித்தாழிசை' எனப்படும்.

**88.** ஐஞ்சீர் அடி நான்காய் நடப்பது கலித்துறை எனப்படும்.

**89.** நாற்சீரால் ஆகிய நான்கடி உடையன எல்லாம் கலிவிருத்தம் எனப்படும்.

**90.** தூங்கல் இசையைத் தமக்குரிய இசையாக உடையன வஞ்சிப் பாக்கள். அவை, தனிச்சொல்மேலாடு புணர்ந்து, ஆசிரியச் சுரிதகத்தால் இறும்.

**91.** இருசீர் அடி நான்காய் ஒருபொருண்மேல் மூன்றாய் வருவன வஞ்சித்தாழிசை; அச்செய்யுள் நான்கடியாய் ஒருபொருண்மேல் ஒன்றாய் வருவது வஞ்சித்துறை எனப்படும்.

**92.** முச்சீர் அடி நான்கு உடைத்தாய் வரும் செய்யுள் வஞ்சிவிருத்தம் எனப்படும்.

93. பாவும் பாவினமும் முற்சொன்ன இலக்கணத்தில் திரிந்து மிக்கும் குறைந்தும் வந்தாலும், அவற்றை ஒருபுடை ஒப்புமை நோக்கி, ஒழிந்த செய்யுள்களையும் அவற்றின் பாற்படுத்து வழங்கப்படும்.

94. அடியின் முதலில் செய்யுளகத்துப் பொருளைத் தழுவித் தனியே நிற்கும் சீர் 'தனிச்சொல்' எனப்படும்; அது வஞ்சிப்பாவின் ஈற்றின்கண்ணும் வரப்பெறும்.

95. நிரல்நிறை முதலாகிய பொருள்கோளும், அறுவகைப்பட்ட சொல்லினது விகாரமும், எழுத்து அல்லாத கிளவியை அசைபெறுத்து இயற்றலும், வகையுளி சேர்த்தலும், அம்மை முதலாகிய எட்டு வனப்புகளும், வண்ணங்களும், மற்றொழிந்தனவும் வரலாற்று முறைமையோடும் பொருந்த நடாத்துதல் புலவர் கடன்.

96. சித்திரகவி வகைகள் கூறுதல், நூல் உரைக்கும் ஆசிரியனது பெருமை கூறுதல் ஆகியன இந்நூற்பாவில் அமைந்துள்ளன.



# ஆய்வு முகவுரை

தமிழ்மொழி இலக்கிய வளமும், இலக்கண வளமும் மிக்கது. தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, பாட்டியல், நிகண்டு என வகைமைபெற்று வளர்ந்துள்ளது. மூன்றிலக்கணம், ஐந்திலக்கணம் என வகைப்படுத்தப்பெறும் வகைப்பாடுகளைத்தாண்டி எழுவகைப்படுத்தப்படும் நிலையைத் தமிழில் இலக்கணம் எய்தியுள்ளது.

எழுத்து, சொல் ஆகியவற்றைத் தனித்துக்கூறும்நூல்களுள் நன்னூலும், அகப்பொருள் இலக்கணத்தைத் தனித்துக்கூறும் நூல்களுள் நம்பியகப்பொருளும், புறப்பொருள் இலக்கணத்தைத் தனித்துக் கூறும் நூல்களுள் புறப்பொருள் வெண்பாமாலையும், யாப்பிலக்கணத்தைத் தனித்துக்கூறும் நூல்களுள் யாப்பருங்கலமும், யாப்பருங்கலக்காரிகையும், அணியிலக்கணத்தைத் தனித்துக்கூறும் நூல்களுள் தண்டியலங்காரமும் தனித்து வளர்ந்த எழுத்து, சொல், பொருள், யாப்பு அணி ஆகிய இலக்கண வகைகளைச் சார்ந்த நூல்களுள் குறிப்பிடத்தக்கன.

## யாப்பிலக்கணம்

செய்யுள்களின் — பாக்களின் — வடிவ இலக்கணமே 'யாப்பிலக்கணம்' ஆகும். பாக்களின் வடிவ, அமைதியை ஆராய்தல் 'யாப்பாராய்தல்' எனப் படும்.

யாப்பாராய்தல் குறித்து யாப்பருங்கலக்காரிகைக்கான தமது உரையில் குணசாகரர்,

> "யாப்பு ஆராயவே பா, தாழிசை, துறை, விருத்தங்களால் ஆக்கப்பட்ட அறம், பொருள், இன்பம், வீடு என்னும் அவற்றின் மெய்ம்மையறிந்து, விழுப்பமெய்தி, இம்மை மறுமை வழுவாமல்நிகழ்வாராதலின், இருமைக்கும் உறுதி பயப்பது யாப்பெனக் கொள்க."[1]

என்று எடுத்துரைத்துள்ளார்.

யாப்பு என்பது இறுக்கமான இலக்கணமாக அமைந்து அச்சுறுத்தாமல் இனிய கலையாகவே தமிழில் அமைந்து திகழுகின்றது. யாப்புக்கலையின் இயல்பையும் ஏற்றத்தையும் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்,

> " இலக்கியக்குதிரை ஓர் ஒழுங்கிற்கு அடங்கி வரும்படி இலக்கணக் கடிவாளம் இட்டு ஓட்டிக் கவி இன்பமாம் முடிவிடம் சேரவேண்டும். யாப்பிலக்கணம் முதலியன இத்தகைய கடிவாளங்களாகும் "[2]

எனவும்,

> " யாப்பு ஒரு கலை. அதில் பழகுதல் வேண்டும். தேமாங்காய், புளிமாங்காய் முதலிய வாய்பாடுகள், தன்னதனா முதலிய சந்தக் குழிப்புகள் — இவை எல்லாம் அவ்வாறு பழகுதற்கு உதவுவன ; பாட்டு வெள்ளத்தில் நீந்த உதவும் சுரைக்குடுக்கைகள். பழகியபின் புதுவழிகள் தோன்றும். ... இந்தக் கலையிற் பழகப் பழகப் பாட வராமற் போனாலும் பாடிய பாவலர்களின் யாப்புக்கலையின் நுணுக்கங்கள் விளங்க விளங்கப் பேரின்பம் துளிர்க்கும் "[3]

எனவும் விதந்துரைத்துள்ளார்.

இவ்வரிய யாப்புக் கலையைப் பழக உதவும் படைப்புகளே யாப்பிலக்கண நூல்களாகும்.

## " யாப்பு " — இலக்கண வரையறை

' யாப்பு ' என்னும் சொல் செய்யுள்களின் வடிவ இலக்கணங்கூறும் துறையைக் குறிப்பதாக இன்று வழங்குகின்றது. 'யாப்பு' என்பதன் இலக்கண வரையறையை இருநிலைகளில் இலக்கண நூல்கள் கூறுகின்றன.

தொல்காப்பியம் யாப்பு என்பதன் வரையறையை,

> " எழுத்து முதலா ஈண்டிய அடியில்
> குறித்த பொருளை முடிய நாட்டல்
> யாப்பென மொழிப யாப்பறி புலவர்"

(தொல்காப்பியம்—செய்யுளியல் நூ. 74)

என்று குறிப்பிடுகின்றது. இவ்வரையறை, எழுத்து முதல் அடி ஈறான பாவின் வடிவக் கூறுகளும் அவ்வடிவக் களனில் இடம்பெறும் பொருண்மையும் இணைந்தமைவதை 'யாப்பு' எனக் குறிப்பிட்டமைகின்றது.

தொல்காப்பியத்திற்குப் பின்னர்த் தோன்றிய நூல்களுள் இங்குப் பதிப் பிக்கப்பட்டுள்ள 'யாப்பருங்கலம்' எனும் இந்நூல் 'யாப்பு' என்பதற்குத் தரு கின்ற வரையறை, தனித்துக் குறிப்பிடத்தக்கதாகவும் தொல்காப்பிய வரை யறையிலிருந்து வேறுபட்டதாகவும் அமைந்துள்ளது.

" எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கோடு
இழுக்கா நடையது யாப்பெனப் படுமே "

(யாப்பருங்கலம் நூ. 1)

என்பது 'யாப்பு' என்பதற்கு யாப்பருங்கலம் தரும் வரையறையாகும். இவ்வரை யறை பாவையும் பாவின் வடிவக் கூறுகளையும் மட்டுமே 'யாப்பு' எனக் குறிப் பிடுகின்றது. 'பல்காயம்' எனும் நூலின் நூற்பாவடிப்படையில் (காண்க. இந் நூல் ப. 2. ஒப்புமைப்பகுதி) யாப்பருங்கலம் செய்துள்ள இவ்வரையறையே பிற் காலத்தில் நிலைபெற்று வழங்குகின்றது.

தமிழ் யாப்பியலில் 'யாப்பு' என்பதற்குக் கூறப்பட்டுள்ள குறிப்பிடத் தக்க இவ்விரு வரையறைகளையும் ஒப்பிட்டுக்காணுங்கால், செய்யுள்களின் வடிவக்கூறுகளையும் பொருண்மையையும் இணைத்து இலக்கணங்கூறுவதை 'யாப்பு' எனல் பண்டைய நெறி என்பதும், பொருண்மை தவிர்த்துச் செய்யுள் களின் வடிவங்குறித்து மட்டும் இலக்கணங்கூறுவதை 'யாப்பு' எனல் பின்னைய நெறி என்பதும் புலனாகின்றன. பின்னைய நெறியே யாப்புலகில் நிலை பெற்று வழக்கிலுள்ளது.

செய்யுள்களின் வடிவ இலக்கணமே 'யாப்பு' எனப்படும் எனும் பின்னை வரையறை கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

## யாப்பிலக்கண நூல்கள்

தொல்காப்பியம் தொடங்கி இக்காலப் 'பாவலர் பண்ணை' (இரா. திரு முருகன், 1987.) எனும் இலக்கண நூல் ஈறான நூல்களில், யாப்பிலக்கணம், நூலின் ஒரு பகுதியாகவும் முழுமையாகவும் இடம்பெற்று வந்துள்ளது.

தொல்காப்பியத்தைப் பொறுத்தவரை அதன் இயல்களுள் ஒன்றான 'செய்யுளிய'லில் யாப்பிலக்கணம் இடம்பெற்றுள்ளது. தொல்காப்பியச் செய்யுளியல், செய்யுள்களின் புற அமைப்பான யாப்பிலக்கணத்தையும் அக அமைப்பான பொருண்மையையும் இணைத்த நிலையில் இலக்கணங் கூறுகின்றது.

தொல்காப்பியச் செய்யுளியலுக்குப் பின்னர் யாப்பிலக்கணங் கூறுவதாக முழுநூல் வடிவில் நமக்குக் கிடைத்துள்ளது 'யாப்பருங்கலம்' எனும் நூலே யாகும்.

பாக்கள், பாவினங்களின் அடிப்படை உறுப்புகளான எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை ஆகியவற்றின் இலக்கணத்தையும், பா, பாவினங் களின் வடிவ இலக்கணத்தையும் யாப்பிலக்கண நூல்கள் கூறுகின்றன.

தொல்காப்பியச் செய்யுளியல், காக்கைபாடினியம், அவிநயம், சிறு காக்கைபாடினியம், மயேச்சுரம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, வீரசோழியம், சிதம்பரப்பாட்டியல், இலக்கண விளக்கம், இலக்கணச் சூடா மணி, தொன்னூல் விளக்கம், வண்ணத்தியல்பு, அறுவகை இலக்கணம், விருத்தப்பாவியல் முதலிய நூல்கள் யாப்பிலக்கணங் கூறும் நூல்களுள் குறிப்பிடத்தக்க சில ஆகும். பூவை கலியாணசுந்தரனாரின் 'செய்யுளிலக் கணம்', புலவர் குழந்தையின் 'யாப்பதிகாரம்' முதலிய நூல்கள் யாப்பிலக் கணத்தை உரைநடையில் கூறுகின்றன. தொல்காப்பியத்திற்குப் பின்னர்த் தோன்றியுள்ள யாப்பிலக்கணங்கூறும் நூல்களுள் யாப்பருங்கலமும் யாப்பருங் கலக்காரிகையும் செல்வாக்கு மிக்குத் திகழுகின்றன.

## யாப்பருங்கலம்

கி. பி. பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய இந்நூலை இயற்றியவர் அமிதசாகரர் ஆவார்.

'யாப்பருங்கலம்' எனும் இந்நூற்பெயருக்கான விளக்கத்தை இருநிலை களில் கூறும் போக்குகள் காணப்படுகின்றன.

கடல்போன்ற யாப்புப் பரப்பைக் கடக்க உதவும் கலம் போன்றது எனும் பொருளில் நூற்பெயர் அமைந்துள்ளது என்பதை, " யாப்பின் பரப்பைக்

கடலெனக்கொண்டு அக்கடலைக் கடத்தற்குத் தம்நூல் ஒரு கலம் போல்வ தெனக் கருதி அதற்கு அவா யாப்பருங்கலம் என்ற பெயரை வழங்கினார்"[4] என்னும் கூற்றும், அருங்கல அணிகளைக் கோத்தமைப்பதைப் போல யாப்புச் செய்திகளைக் கோத்தமைத்த நூல் எனும் பொருளில் நூற்பெயர் அமைந்துள்ளது என்பதை "அருங்கல அணிகள் பலவற்றை ஒருங்கு கோத்துக் கொடுப்பதைப் போல, இந்நூல் யாப்புப் பற்றிய பல செய்திகளை அழகுபடக் கோத்துக் கொடுத்திருத்தலால், இது 'யாப்பருங்கலம்' எனப் பெயரிடப் பட்டது"[5] என்னும் கூற்றும் எடுத்துரைக்கின்றன.

தனிநூலாகக் கிடைக்காமல் மிகப்பல நூற்பாக்களின்வழி அறியப்படும் 'காக்கைபாடினியம்' எனும் நூலின் யாப்புநெறியைப் பெரிதும் அடியொற்றுவதாக 'யாப்பருங்கலம்' அமைந்துள்ளது. யாப்புலகில் பயிற்சியும் செல்வாக்கும் மிக்க யாப்பருங்கலக்காரிகைக்கு முன்னோடிநூல் எனும் தனித்தகுதி இந்த 'யாப்பருங்கல' நூலுக்குண்டு.

இந்நூலின் பாயிரத்தில் 'அளப்பருங் கடற்பெயர் அருந்தவத்தோன்' எனும் தொடர் இடம்பெற்றுள்ளமை, நூலாசிரியர் பெயர் 'அமிதசாகரர்' என்பதை அறிவித்தமைகின்றது. நூலாசிரியர் பெயரை 'அமுதசாகரர்' 'அமிர்தசாகரர்' எனக் குறிப்பிடும் போக்கு நிலவினும், 'அமிதசாகரர்' எனும் பெயரே சரியென்பதை அத்தொடர் உறுதிப்படுத்துகின்றது. அமிதசாகரர் சமணசமயத்தைச் சார்ந்தவர் என்பதும் சமண சமயத்தின் அருங்கலம் என்னும் பரம்பரையைச்சார்ந்தவர் என்பதும் குறிப்பிடத்தக்கன.[6] தமிழ் யாப்பியற் செய்திகளை ஒரு களஞ்சியம்போல வழங்கும் புகழ்பெற்ற விருத்தியுரை இவ்வியாப்பருங்கலத்திற்கமைந்ததே.

இந்நூல் உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் என்னும் மூன்று இயல்களையும் 96 நூற்பாக்களையும் கொண்டமைந்துள்ளது. எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை ஆகிய பாவுறுப்புகளின் இலக்கணமும், நால்வகைப் பாக்கள், தாழிசை, துறை, விருத்தம் எனும் அவற்றின் மும்மூன்றினங்கள் ஆகியவற்றின் இலக்கணமும் இந்நூலின்கண் இடம்பெற்றுள்ளன.

யாப்பருங்கல ஆசிரியரால் யாப்புப் பொருண்மையிலேயே இயற்றப்பட்ட மற்றுமொரு நூலாக யாப்பருங்கலக்காரிகை திகழுகின்றது.

ஒரே ஆசிரியரால் ஒரே பொருண்மையில் யாப்பருங்கலமும் யாப்பருங் கலக்காரிகையும் இயற்றப்பட்டுள்ளபோதிலும் இரண்டுக்குமிடையே சில வேறு பாடுகள் காணப்படுகின்றன. கலம் அகவல்நூற்பாக்களாலும் காரிகை கட்டளைக்கலித்துறைப் பாக்களாலும் இயற்றப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

யாப்பருங்கலம் விரிவான விருத்தியுரையையும், காரிகை சுருக்கமான உரையையும் பெற்றுள்ளன. சுருக்கமான உரையமைப்புக் காரணமாக யாப்பருங் கலக்காரிகையே கற்போரிடையில் பழக்கத்தில் உள்ளது.

கலத்தினும் காரிகையே எளிமையாகவும் தெளிவாகவும் அமைந்துள்ளது எனும் கருத்து அறிஞரிடையே நிலவுகிறது. எனினும் இருநூல்களின் மூலங் களை மட்டும் ஒப்பிட்டுப் பார்க்கையில் காரிகையினும் யாப்பருங்கலமே தெளி வாகவும் எளிமையாகவும் இலக்கணங் கூறுகின்றமையை அறியமுடிகின்றது. காரிகையில் இலக்கணச் செய்திகளற்ற மகடூஉ முன்னிலைத்தொடர்கள் இடம் பெறுதல் போன்ற இடையூறுகள், கலத்தின் நூற்பாக்களில் இல்லை.

## யாப்பருங்கலம் குறித்த அறிஞர்தம் மதிப்பீடுகள் சில :

### O புலவர் குழந்தையின் மதிப்பீடு :

" இன்று பயிற்சியிலுள்ள யாப்பிலக்கண நூல்கள் —

1. தொல்காப்பியச் செய்யுளியல்
2. யாப்பருங்கலம்
3. யாப்பருங்கலக்காரிகை

என்னும் மூன்றுமேயாம் "[7]

### O முனைவர் சோ. ந. கந்தசாமியின் மதிப்பீடு :

" பிற்காலத்தில் தோன்றிய யாப்பிலக்கண நூல்கள் பலவாயி னும், அவற்றுள் யாப்பருங்கலமும் யாப்பருங்கலக்காரிகை யுமே சுட்டத்தக்க செறிவும் சிறப்பும் உடைய இலக்கண நூல்களாகப் பயிலப்பெற்று வந்துள்ளன என்ற உண்மை யும் நம் ஆராய்ச்சியினால் தெளியப்படுகின்றது ".[8]

○ பண்டித வித்துவான் தி. வே. கோபாலையரின் மதிப்பீடு :

" மக்களிடையே பாவினம் பற்றிய யாப்புச்செய்திகள் பலவும் காக்கைபாடினியார் முதலியோரால் தம் நூல் வாயிலாகப் பரப்பப்பட்ட பிறகு ஏற்பட்ட யாப்பருங்கலத்தில் அவை குறிப்பிடாத தனிச் சிறப்புடைய செய்தி எதுவும் இல்லை. இந்நூலுக்குச் சிறப்புத்தருவது இவ்வாசிரியரின் மாணாக்கரான குணசாகரர் இயற்றிய பேருரையே ".[9]

## கலம்—காரிகை இரண்டின் மூலங்களுக்கிடையே வேறுபாடுகள்

ஒரே ஆசிரியரால் ஒரே பொருண்மையில் படைக்கப்பெற்ற நூல்களாகக் கலமும் காரிகையும் இருப்பினும், இரண்டுக்குமிடையில் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. அவை வருமாறு:

| | கலம் | காரிகை |
|---|---|---|
| 1 | நூற்பா அகவல் யாப்பில் நூல் அமைந்துள்ளது. | கட்டளைக் கலித்துறை யாப்பில் அமைந்துள்ளது. |
| 2 | அவையடக்கம் கூறப்படவில்லை. | கூறப்பட்டுள்ளது. |
| 3 | நூலாசிரியர் பெயர் கூறப்பட்டுள்ளது. | கூறப்படவில்லை. |
| 4 | உதாரணங்கள் நூலாசிரியரால் பாடப்பெறவில்லை. | சில உதாரணங்கள் பாடப்பெற்றுள்ளன. |
| 5 | மகடூஉ முன்னிலைகள் நூற்பாக்களில் இடம்பெறவில்லை. | இடம்பெற்றுள்ளன. |
| 6 | அசைக்கு உறுப்பாகும் எழுத்துகள் 15 எனக் கூறப்பட்டுள்ளது. | 13 எனக் கூறப்பட்டுள்ளது. |
| 7 | மருட்பாவுக்கு இலக்கணம் கூறப்படவில்லை. | கூறப்பட்டுள்ளது. |

| | கலம் | காரிகை |
|---|---|---|
| 8 | மாலை மாற்று முதலிய சித்திர கவி வகைகள், நூலாசிரியரின் இலக்கணம் ஆகியவை கூறப் பட்டுள்ளன. | கூறப்படவில்லை. |
| 9 | யாப்புறுப்புகளை எழுத்து அசை, சீர், தளை, அடி, தொடை, தூக்கு எனக் குறிப்பிடுகிறது. | எழுத்து, அசை, சீர், பந்தம் அடி, தொடை, பா, இனம் எனக் குறிப்பிடுகின்றது. கலம் 'தளை' எனும் தமிழ்ச் சொல்லைப் பயன்படுத்த இந் நூல் 'பந்தம்' எனும் வட சொல்லைத் தளையைக் குறிக்கப் பயன்படுத்தியுள்ளது. கலம் 'தூக்கு' எனக் குறிப்பிட்ட தைப் 'பா', 'இனம்' என இது தெளிவாக விரித்துரைத் துள்ளது. |
| 10 | இயற்சீர், உரிச்சீர், பொதுச்சீர் எனும் பெயர்கள் உள. | உரிச்சீர், பொது(ச்சீர்) எனும் ஆட்சிகள் மட்டும் உள. |
| 11 | அறுசீர் முதல் பதின்சீர் வரையும், அவற்றினும் மிக்கும் கழிநெடிலடி அமையும் எனக் கூறப்பட்டுள்ளது. | ஐஞ்சீர்க்கு மேற்பட்ட சீர்களால் அமையும் அடிகள் கழிநெடிலடிகள் ஆகும் எனக் கூறப் பட்டுள்ளது. |
| 12 | முரண்தொடை விகற்பங்களாக 1) கடையிணைமுரண் 2) பின்முரண் 3) இடைப் புணர்முரண் ஆகியன கூறப் பட்டுள்ளன. | முரண்தொடை விகற்பங்களாக 1) கடைமுரண் 2) கடையிணை முரண் 3) பின்முரண் 4) கடைக் கூழை முரண் 5, இடைப்புணர் முரண் ஆகியன கூறப் பட்டுள்ளன. |
| 13 | பாவின் வைப்புமுறை தாழிசை, துறை, விருத்தம் எனத் தெளிவாக வரிசைப்படுத்திக் கூறப்பட்டுள்ளது. | அவ்வாறு கூறப்படவில்லை. |

| | கலம் | காரிகை |
|---|---|---|
| 14 | ஓசையை 'இசை' எனும் பெயரால் குறிப்பிடுகிறது. | 'ஒலி' என மட்டும் சுட்டுகிறது. |
| 15 | சிந்தியல்வெண்பாவில் வகை கூறப்படவில்லை. | நேரிசை, இன்னிசை எனும் வகைகள் கூறப்பட்டுள்ளன. |
| 16 | 'தாழிசைக் குறள்' எனக் குறட்டாழிசை குறிக்கப்படுகிறது. | 'குறளினத் தாழிசை' எனக் குறிக்கப்பட்டுள்ளது. |
| 17 | 'வெள்ளொத்தாழிசை' எனும் ஆட்சி உள்ளது. | 'வெண்டாழிசை' எனும் ஆட்சியே உள்ளது. |
| 18 | வெண்டுறையில் 'வேற்றொலி' எனும் குறிப்புளது. | 'வேற்றொலி' எனும் குறிப்பில்லை. |
| 19 | அகவற்பா ஏ, ஓ, ஈ, ஆய், என், ஐ எனும் ஈறுகள் பெற்றும் முடியும் எனக் கூறப்பட்டுள்ளது. | ஈறுகள் பற்றிக் கூறப்படவில்லை. |
| 20 | அடிமறிமண்டிலம் 'மண்டிலம்' என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. | 'அடிமறி மண்டிலம்' என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. |
| 21 | வெண்கலி, கலிவெண்பா இரு பெயர்களும் உள. | 'வெண்கலி' எனப் பெயர் குறிக்கப்பட்டுள்ளது |
| 22 | பாக்களின் அடிப்பெருமைபற்றிப் பேசப்படவில்லை. | அடிப்பெருமை, 'உள்ளக் கருத்தின் அளவே' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. |
| 23 | தேமா, புளிமா முதலிய வாய்பாடுகள் இடம்பெறவில்லை. | இடம்பெற்றுள்ளன. |
| 24 | பாவினம் எல்லா வகை அடியானும் அமையும் எனக் கூறப்பட்டுள்ளது. | அவ்வாறு கூறப்படவில்லை. |
| 25 | வெண்பா ஈற்றுச்சீர் வாய்பாடுகள் கூறப்படவில்லை. | வெண்பா ஈற்றுச்சீர், காசு, பிறப்பு எனும் வாய்பாட்டில் அமையும் எனக் கூறப்பட்டுள்ளது. |

| கலம் | காரிகை |
|---|---|
| O | |
| (i) இயற்சீர், உரிச்சீர், பொதுச் சீர் எனச் சீர் மூன்றாகும். | |
| (ii) தளை ஏழ் வகைப்படும். | |
| (iii) குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என அடி வகைப்படும். | |
| (iv) வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி எனப்பா நால் வகைப்படும். | |
| (v) குறள், சிந்து, இன்னிசை நேரிசை, பஃறொடை என வெண்பா ஐந்து வகைப் படும். | இவ்வாறு கலத்தைப் போலத் தெளிவாக வகைகளைத் தொகை சுட்டியும் வரிசைப்படுத்தியும் வரையறுத்து இலக்கணங்கூறும் முயற்சிகள் இடம்பெறவில்லை. |
| (vi) நேரிசை, இணைக்குறள், மண்டிலம், நிலைமண்டிலம் என அகவல் நால்வகைப் படும். | |
| (vii) ஒத்தாழிசைக்கலி, வெண் கலிப்பா, கொச்சகக்கலிப்பா எனக் கலிப்பா மூவகைப் படும். —எனத் தொகைசுட்டியும் வரிசைப்படுத்தியும் தெளிவாக வகைப்படுத்தும் வரையறைகள் இடம்பெற்றுள்ளன. | |

இவ்வாறு கலம், காரிகை இரண்டுக்குமிடையே சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. கலத்தினும் காரிகையே சிறந்தது, தெளிவாகவும் எளிமையாகவும் இலக்கணங் கூறுவது என்னும் கருத்துப் பொதுவாக நிலவினும் காரிகையினும் கலமே தெளிவாகவும் எளிமையாகவும் அமைந்துள்ளமை மேலே கண்ட செய்திகளால் புலனாம். கலத்தின் மூலச்சிறப்பை அதற்கமைந்த மிக விரிவான

விருத்தியுரை மறைத்து நிற்பதால் சுருக்கமான உரையைப் பெற்றுவிட்ட காரிகையே சிறந்தது; தெளிவாகவும் எளிமையாகவும் இலக்கணங் கூறுவது எனும் தோற்றம் ஏற்பட்டுவிட்டது.

## யாப்பருங்கலத்தின் இறுதி நூற்பா—ஒரு சிந்தனை

யாப்பருங்கலத்தின் மொத்த நூற்பாக்கள் 96 ஆகும். இந்நூற்பாக்கள் பெரும்பாலும் நான்கடிக்கு உட்பட்டனவாகவே அமைந்துள்ளன. ஆறடியாலும் ஏழடியாலும் ஒவ்வொரு நூற்பா மட்டும் காணப்படுகின்றன. நூலிலேயே அதிக எண்ணிக்கையில் அடிகளைப் பெற்றதாய் ஒரு நூற்பா மட்டும் அமைந்துள்ளமை தனித்து நோக்கத்தக்கதாக உள்ளது. நூலிறுதியில் இடம்பெற்றுள்ள இந்நூற்பாவின் அடியெண்ணிக்கை 29 ஆகும்.

இந்நூற்பா பின்வரும் காரணங்களால் நூலாசிரியரால் படைக்கப்பட்டதன்றோ எனும் ஐயம் எழுகின்றது.

1) நூலின் நூற்பாச் சீர்மைக்கு மாறாக மிகு எண்ணிக்கையில் அடிகளைப் பெற்றுள்ளது.

2) மூலத்தை மட்டும் கொண்ட சில சுவடிகளில் இந்நூற்பா இடம்பெறவில்லை; 95ஆம் நூற்பாவோடு நூல் முற்றுப்பெற்றதாய்க் குறிப்பிடப்பட்டுள்ளது.

3) இந்நூற்பாக் கூறும் செய்திகள் காரிகையில் காணப்படவில்லை.

4) நூற்பாவின் செம்பாதிப் பகுதி திவாகர நூற்பாவாகத் திவாகர நிகண்டில் (நூ. 2336) இடம்பெற்றுள்ளது.

இவற்றால் இந்நூற்பா நூலாசிரியரால் படைக்கப்படாமல் உரையாசிரியரால் படைக்கப்பெற்று நூலின் இறுதி நூற்பாவாக வைக்கப்பட்டிருக்கலாம் என எண்ணத்தோன்றுகின்றது.

## யாப்பருங்கல நூலாசிரியர் பற்றிய பெருந்தேவனாருரைக் குறிப்பு:

'வீரசோழியம்' எனும் இலக்கண நூலுக்குப் பெருந்தேவனாரால் இயற்றப்பட்ட உரையொன்று உள்ளது. இவ்வுரையின் காலம் கி. பி. 12ஆம் நூற்றாண்டாகும்.[10]

இவ்வுரையில் யாப்பருங்கல நூற்பாக்கள் இரண்டு எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. நூற்பெயர் சுட்டப்பெறாமல் நூலாசிரியர் பெயர்மட்டும் சுட்டி இந்நூற்பாக்கள் எடுத்துக் காட்டப்பெற்றுள்ளன. நூலாசிரியர் பெயர் 'அமுத சாகரர்', 'அமிர்தசாகரனார்' ஆகிய இரு வடிவங்களில் காணப்படுகின்றன.

அப்பகுதிகள் வருமாறு:

> " மிக்குங் குறைந்தும் வரினும் ஒருபுடை
> ஒப்புமை நோக்கி ஒழிந்தவுங் கொளலே
>
> *என்றார் அமுதசாகரனார்."* [11]

> " மாலை மாற்றே சக்கரஞ் சுழிகுள
> ... ... ... ...
> னந்தமில் கேள்வி யாசிரி யன்னே
>
> *என்று அமிர்தசாகரனார் கூறியன கொள்க "* [12]

## யாப்பருங்கலம் குறித்த நச்சினார்க்கினியர் குறிப்பு :

யாப்பருங்கலம் முதலியன கூறிய சித்திரகவிகளைத் தாம் இணைத்துக் கூறவில்லை என நச்சினார்க்கினியர் கூறும் பின்வரும் தொல்காப்பியச் செய்யுளியல் உரைப்பகுதியில் யாப்பருங்கலம் பற்றிய குறிப்பு உள்ளமை குறிப்பிடத் தக்கது. இவ்வுரை கி. பி. 14 ஆம் நூற்றாண்டில் தோன்றியதாகும்.[13]

> " இனி **யாப்பருங்கல** முதலியவற்றிற் கூறிய சித்திரகவியி னையும் ஈண்டுச்சேரக் கூறுகவெனின், யந்திரமு மந்திரமு மாய்த் தெய்வத்திற்கேயுரியவாகக் கூறும் மிறைக்கவி இம் முப்பத்துநான்குறுப்பும்போல அகனைந்திற்குரிய சான் றோர் செய்யுட்குறுப்பாய் வாராவென்றும், அத்திணைக்குரிய மரபு வழுவிற்றென்றுங் கருதித் தொல்காப்பியனார் கூறாமை யானும்; அவற்ற திலக்கணங் கூறிய ஆசிரியரும் அவற் றிற்கு இலக்கியஞ் சான்றோர் செய்யுட்களுட் காணாமையின் 'வடவெழுத் தொரீஇப எழுத்தொடு புணர்ந்த சொல்' லானன்றி வடவெழுத்தாற் பெரும்பான்மை வரச் செய்யுள் தாமே செய்து இலக்கியமாகக் காட்டினா ராதலானும், யாமும் இம்மிறைக்கவி யிலக்கணம் ஈண்டுக் கூறாமாயி னாம். "[14]

## நூலகத்தில் இடம்பெற்றுள்ள யாப்பருங்கலச் சுவடிகள் :

சரசுவதி மகால் நூலகத் தமிழ்த்துறையில் 631, 636, 645, 710, 1145 ஆகிய எண்ணிடப்பெற்ற ஐந்து யாப்பருங்கலச் சுவடிகள் இடம்பெற்றுள்ளன. இவற்றுள் 1145 ஆம் எண்ணிட்ட சுவடி குறைச்சுவடியாகும்; அசை ஓத்து வரையே நூல் எழுதப்பெற்றுள்ளது. இச் சுவடியைத் தவிரப் பிற சுவடிகள் மூலம் மட்டுமே அமைந்த சுவடிகளாகும், யாப்பருங்கலத்தின் இறுதி நூற்பாவாகக் காணப்படும் சித்திரகவி முதலியவற்றின் இலக்கணங்கூறும் நூற்பா 631, 636 ஆகிய சுவடிகளில் இடம்பெறவில்லை.

## யாப்பருங்கலம்—முற்பதிப்புகள்

மூலம் மட்டும் கொண்ட பதிப்பு முதலிலும், பின்னர் விருத்தியுரையுடன் கூடிய பதிப்புகளும் வெளிவந்துள்ளன. மூலப்பதிப்பை நரசிங்கபுரம் வீராசாமி முதலியாரும், விருத்தியுரையுடன் கூடிய பதிப்புகளைப் பவானந்தம் பிள்ளை, மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, இரா. இளங்குமரன் ஆகியோரும் பதிப்பித்துள்ளனர்.

யாப்பருங்கலம் இதுவரை பெற்றுள்ள பதிப்புகளைப் பின்வருமாறு வரிசைப்படுத்தலாம்.

1 யாப்பருங்கல மூலம், நரசிங்கபுரம் வீராசாமி முதலியார் பதிப்பு, இயற்றமிழ் விளக்க அச்சுக்கூடம், சென்னை, 1864.[15]

(நன்னூல், நம்பி அகப்பொருள், புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலக்காரிகை, தண்டியலங்காரம் ஆகியவற்றின் மூலத்தோடு இணைத்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.)

2 யாப்பருங்கல மூலம் (பழைய விருத்தியுரையுடன்), இராவ்பகதூர் ச. பவானந்தம் பிள்ளை பதிப்பு, பகுதி-1: சென்னை, 1916; பகுதி-2: சென்னை, 1917.

3 யாப்பருங்கல மூலம் (பழைய விருத்தியுரையுடன்), மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை பதிப்பு, அரசுக் கீழ்த்திசைச் சுவடி நூலக வெளியீடு, சென்னை, 1960.

4 யாப்பருங்கலம் (பழைய விருத்தியுரையுடன்), புலவர் இரா. இளங்குமரன் பதிப்பு, திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1976.

5 யாப்பருங்கலம் (பழைய விருத்தியுரையுடன்), மே. வீ. வே. பதிப்பின் மறுபதிப்பு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். சென்னை, 1998.

## இப்பதிப்பின் தனித்தன்மையும் சிறப்புகளும்

யாப்பருங்கல மூலம் மட்டுமே இப்பதிப்பில் இடம்பெறுகின்றது. யாப்பருங்கலத்தை ஒத்த முன்னை இலக்கண நூற்பாக்களும் யாப்பருங்கலத்தை இயற்றிய அமிதசாகரராலேயே இயற்றப்பட்ட யாப்பருங்கலக்காரிகையிலுள்ள ஒத்த இலக்கணக் காரிகைகளும் ஒப்புமை இலக்கணப் பகுதிகளாக இப்பதிப்பில் தரப்பட்டுள்ளன.

இதுகாறும் வெளிவந்துள்ள யாப்பருங்கல அச்சுநூற் பதிப்புகளையும் சரசுவதி மகால் நூலகத்தில் இடம் பெற்றுள்ள யாப்பருங்கலச் சுவடிகளையும் ஒப்பிட்டு மூல நூற்பாக்களுக்கிடையே காணப்படும் பாடவேறுபாடுகள் தொகுக்கப்பெற்று நூலிறுதியில் அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன. நூற்பாக்களில் இடம்பெற்றுள்ள இலக்கணக் கலைச்சொற்களுக்கான அகரநிரல், நூற்பா முதற்குறிப்பு அகரநிரல் ஆகியனவும் நூலிறுதியில் இடம்பெற்றுள்ளன. இவ்வியாப்பருங்கல ஆசிரியராலேயே இயற்றப்பட்ட யாப்பருங்கலக் காரிகையின் மூலம், ஆய்வாளர்கள் தனித்து முழுமையான வடிவில் இணைத்துப் பார்க்க வசதியாக இப்பதிப்பில் பிற்சேர்க்கையாக அளிக்கப்பட்டுள்ளது. நூலாசிரியராகிய அமிதசாகரர் குறித்த அறிஞர் மு. அருணாசலம் அவர்களின் அரிய கட்டுரைப்பகுதியும் நூலாசிரியர் குறித்து விரிவாக இப்பதிப்பைக் கண்ணுறுவோர் அறியும்பொருட்டுப் பிற்சேர்க்கையாக அளிக்கப்பெற்றுள்ளது.

தமிழுலகில் இக்காலத்தில் புலவர் இரா. இளங்குமரன் பதிப்பித்த யாப்பருங்கலமே பயிற்சியில் உள்ளதால், வழக்கிலுள்ள பாடங்களோடு சுவடிப் பாடங்கள் மாறுபட்டு மயக்கம் விளைக்கக் கூடாதெனக் கருதிப் புலவர் இரா. இளங்குமரன் பதிப்பின் பாடங்களே இந்நூலின் பாடங்களாகவும் கொள்ளப் பட்டுள்ளன. நூற்றொடக்கத்தில் விருத்தியுரையின் 'இதன் பொருள்' எனும் பகுதியில் இடம்பெற்றுள்ள கருத்தின் அடிப்படையிலும், அப்பகுதியின் தொடர்களையே ஆண்டும் நூற்பாக்களின் பொருள் கூறும் பகுதி அமைக்கப் பட்டுள்ளது.

**நன்றியுரையும் நிறைவுரையும் :**

யாப்பருங்கல மூலத்தைத் தனித்து ஆய்வுப்பதிப்பாக வழங்கும் இந்நூன் முயற்சி " பருவ இதழ்ப் படைப்பு மற்றும் தனி நூல் வெளியீட்டுத் திட்டத்தின் " கீழ் நூலாக வெளிவருகிறது. இப்பதிப்பு வெளிவர அனுமதியும் வெளியீட்டாளர் முகவுரையும் அளித்துச் சிறப்பித்த மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும் நூலக இயக்குநர் திருமிகு முனைவர் மூ இராசாராம், இ. ஆ. ப., அவர்களுக்கும், நூல் நன்முறையில் வெளிவர ஆவன செய்த நூலக நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம் எம். ஏ., அவர்களுக்கும், நூலக வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன், எம். ஏ., எம். எல். ஐ. எஸ்., அவர்களுக்கும் நூலைச் செப்பமுற அச்சிட்டளித்த சரசுவதி மகால் நூலக அச்சகப் பிரிவினருக்கும் துணை நின்ற ஏனையோருக்கும் என் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

இப்பதிப்பு நூலின் 39ஆம் பக்கத்தில் '631, 636, 710, 1145 ஆகிய எண்ணிடப்பெற்ற நான்கு யாப்பருங்கல ஓலைச்சுவடிகளையும்' என்றுள்ள பகுதியை, '631, 636, 645, 710, 1145 ஆகிய எண்ணிடப்பெற்ற ஐந்து யாப்பருங்கல ஓலைச்சுவடிகளையும்' எனத் திருத்திப்படிக்க அன்புடன் வேண்டுகிறேன்,

யாப்பருங்கல மூலத்தை ஒப்புமை இலக்கணங்கள், பாடவேறுபாடுகள், அகரநிரல்கள் முதலிய பகுதிகள் அமையப் பதிப்பித்துள்ள இம்முயற்சியின் குறைபொறுத்து நிறைபோற்றித் தமிழுலகம் வரவேற்குமென்பது பதிப்பாசிரியனின் நம்பிக்கை.

தஞ்சாவூர்,

30—5—2000.

**ய. மணிகண்டன்,**
தமிழ்ப்பண்டிதர்,
சரசுவதி மகால் நூலகம்.

# சான்றெண் விளக்கம்

1 குணசாகரருரை, யாப்பருங்கலக்காரிகையின் தற்சிறப்புப்பாயிரம், ப 3, யாப்பருங்கலக்காரிகை, ந. மு. வே. நாட்டார் செய்த திருத்தங்களுடன் கூடிய பதிப்பு, கழக வெளியீடு, சென்னை, 20 ஆம் பதிப்பு 1996.

2 தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், பிறந்தது எப்படியோ? ப. 107, பாரி நிலையம் சென்னை, இரண்டாம் பதிப்பு, 1952.

3 மேலது, ப. 118, 119.

4 எஸ். கலியாணசுந்தரம், 'முகவுரை', யாப்பருங்கலக்காரிகை குணசாகரர் உரையுடன், ப. V, டாக்டர் உ. வே. சா. நூல் நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1968.

5 அ. சிதம்பரநாதன் செட்டியார், 'யாப்பருங்கலம்', கலைக்களஞ்சியம் தொகுதி எட்டு, ப. 578, 579, தமிழ் வளர்ச்சிக்கழகம், சென்னை முதற்பதிப்பு 1961.

6 சோம. இளவரசு, இலக்கண வரலாறு, ப. 97, 98, தொல்காப்பியர் நூலகம், சிதம்பரம், முதற்பதிப்பு 1963,

7 புலவர் குழந்தை, தொடையதிகாரம், ப. 9 பாரி நிலையம், சென்னை, முதற்பதிப்பு 1967.

8 சோ. ந. கந்தசாமி, தமிழ் யாப்பியலின் தோற்றமும், வளர்ச்சியும் (முதற் பாகம்—இரண்டாம் பகுதி), ப. 528, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1989.

9 தி. வே. கோபாலையர், 'மூன்றாம் அமர்வின் முதன்மைக் கட்டுரை', இலக்கணக் கருவூலம் — 3, ப.23, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், 1992.

10 மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு-பன்னிரண்டாம் நூற்றாண்டு, ப. 704, காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம்.

11 பெருந்தேவனாருரை, வீரசோழியம், கா. 125 இன் உரை, ப. 166 கா. ர. கோ. பதிப்பு, பவானந்தர் கழகம், சென்னை, 1942.

12 மேலது, கா. 179இன் உரை, ப. 277, 278.

13 மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு—பதினான்காம் நூற்றாண்டு, ப. 121, காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம், 1969.

14 நச்சினார்க்கினியருரை, தொல்காப்பியம்—செய்யுளியல், நூ. 242 இன் உரை, ப. 270, கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1965.

15 மயிலை சீனி. வேங்கடசாமி, பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், ப. 151, அழகப்பா புத்தக நிலையம், திருச்சி. முதற் பதிப்பு, 1962.

அமிதசாகரனார்

இயற்றிய

# யாப்பருங்கலம்

[மூலம்]

## பாயிரம்

முழுதுல கிறைஞ்ச முற்றொருங் குணர்ந்தோன்
செழுமலர்ச் சேவடி செவ்விதின் வணங்கிப்
பாற்படு தென்றமிழ்ப் பரவையின் வாங்கி
யாப்பருங் கலம்நனி யாப்புற வகுத்தோன்
தனக்குவரம் பாகிய தவத்தொடு புணர்ந்த
குணக்கடற் பெயரோன் கொள்கையின் வழாஅத்
துளக்கறு கேள்வித் துகள்தீர் காட்சி
அளப்பருங் கடற்பெயர் அருந்தவத் தோனே.

## சிறப்புப் பாயிரம்

### தெய்வ வணக்கம்

வெறிகமழ் தாமரை மீமிசை ஒதுங்கிய
அறிவனை வணங்கி அறைகுவன் யாப்பே.

# உறுப்பியல்

## 1 எழுத்தோத்து

### யாப்பு

1 எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கோடு
இழுக்கா நடைய தியாப்பெனப் படுமே.

### அசைக்கு உறுப்பாகும் எழுத்தின் வகை

2 உயிரே மெய்யே உயிர்மெய் யென்றா
குறிலே நெடிலே அளபெடை யென்றா
வன்மை மென்மை இடைமை யென்றா
சார்பில் தோன்றும் தன்மைய வென்றா
ஐஔ மகரக் குறுக்கம் என்றாங்கு
ஐம்மூ வெழுத்தும் ஆம்அசைக் குறுப்பே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

*நூற்பா எண்.*

1 "இமிழ்கடல் வரைப்பின் எல்லையின் வழாஅத்
தமிழியல் வரைப்பில் தானினிது விளங்கி
யாப்பியல் தானே யாப்புற விரிப்பின்,
எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கோடு
இழுக்கா மரபின் இவற்றொடு பிறவும்
ஒழுக்கல் வேண்டும் உணர்ந்திசி னோரே."
—பல்காயனார்
(விருத்தியுரை ப. 17)

2 உயிர்உறுப் புயிர்மெய் தனிநிலை எனாஅக்
குறினெடில் அளபெடை மூவினம் எனாஅ
அஃகிய நாலுயிர் மஃகான் குறுக்கமோடு
ஐந்துதலை யிட்ட ஐயி ரெழுத்தும்
அசைசீர் தளைதொடைக் காகும் உறுப்பென
வசையறு புலவர் வகுத்துரைத் தனரே."
—பெரியபம்மம்
(விருத்தியுரை ப. 31)

**ஒத்த யாப்பருங்கலக்காரிகை இலக்கணம்**

1 "எழுத்தசைசீர்
பந்தம் அடிதொடை பாஇனங் கூறுவன்" (கா. 1)

2 "குறில்நெடில் ஆவி குறுகிய மூவுயிர் ஆய்தமெய்யே
மறுவறு மூவினம் மைதீர் உயிர்மெய் .........
அறிஞர் உரைத்த அளபும் அசைக்குறுப் பாவனவே." (கா. 4)

## ஆய்தத்திற்கும் ஒற்றீற்கும் சிறப்புவிதி

3 தனிநிலை ஒற்றிவை தாமல கிலவே
அளபெடை அல்லாக் காலை யான.

## குற்றியலிகரம், குற்றியலுகரம், உயிரளபெடைகட்குச் சிறப்புவிதி

4 தளைசீர் வண்ணம் தாம்கெட வரினே
குறுகிய இகரமும் குற்றிய லுகரமும்
அளபெடை ஆவியும் அலகியல் பிலவே.

எழுத்தோத்து முற்றும்.

---

### ஒத்த முன்னை இலக்கணம்

3 *"அளபெழின் அல்லதை ஆய்தமும் ஒற்றும்*
*அலகியல் பெய்தா என்மனார் புலவர்"* —அவிநயனார்
(விருத்தியுரை ப. 35)

4 *"இ உ இரண்டன் குறுக்கம் தளைதப*
*நிற்புழி ஒற்றாம் நிலைமைய ஆகும்"*

*"உயிரள பேழும் உரைத்த முறையான்*
*வருமெனின் அவ்வியல் வைக்கப் படுமே."* —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 45)

### ஒத்த காரிகை இலக்கணம்

3 ————

4 *"சீருந் தளையுஞ் சிதையிற் சிறிய இஉ அளபோ(டு)*
*ஆரு மறிவ ரலகு பெறாமையை காரநைவேல்*
*ஒருங் குறிலிய லொற்றள பாய்விடி னோரலகாம்*
*வாரும் வடமுந் திகழு முகிண்முலை வாணுதலே."* (கா. 36)

## 2 அசை ஓத்து

### அசை வகைகள்

5 நேரசை என்றா நிரையசை என்றா
ஆயிரண் டாகி அடங்குமன் அசையே.

### நேரசை

6 நெடில்குறில் தனியாய் நின்றுமொற் றடுத்தும்
நடைபெறும் நேரசை நால்வகை யானே.

### தனிக்குறில் நேரசை ஆகாத இடங்கள்

7 குறிப்பே ஏவல் தற்சுட் டல்வழித்
தனிக்குறில் மொழிமுதல் தனியசை இலவே.

### நிரையசை

8 குறிலிணைகுறில்நெடில் தனித்தும்ஒற் றடுத்தும்
நெறிமையின் நான்காய் வருநிரை அசையே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

5 *"தனியசை என்றா இணையசை என்றா*
*இரண்டென மொழிமனார் இயல்புணர்ந் தோரே."*

—காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 48)

6, 8 *"நெடில்குறில் தனியாய் நின்றுமொற் றடுத்தும்*
*குறிலிணை குறினெடில் தனித்துமொற் றடுத்தும்*
*நடைபெறும் அசைநேர் நிரைநா லிரண்டே"*

—பல்காயனார்
(விருத்தியுரை ப. 53)

7 *"தற்சுட் டேவல் குறிப்பிவை அல்வழி*
*முற்றத் தனிக்குறில் முதலசை ஆகா"*

—பல்காயனார்
(விருத்தியுரை ப. 50)

**ஒத்த காரிகை இலக்கணம்**

6, 8 *"குறிலே நெடிலே குறிலிணை யேனைக் குறினெடிலே*
*நெறியே வரினு நிரைந்தொற் றடுப்பினும் நேர்நிரையென்று*
*அறிவேய் புரையுமென் றோளி யுதாரண மாழிவெள்வேல்*
*வெறியே சுறாநிறம் விண்டோய் விளாமென்று வேண்டுவரே"* (கா.5)

7 *"விட்டிசைத் தல்லான் முதற்கண் தனிக்குறில் நேரசையென்(று)*
*ஒட்டப் படாது"* (கா. 37)

### ஐகாரக்குறுக்கம் இணைந்த நிரையசை

9 ஈறும் இடையும் இணைந்தும் இணையசை
ஆகுர் ஐ என்ப அறிந்திசி னோரே.

அசையோத்து முற்றும்.

## 3. சீர் ஓத்து

### சீர் வகைகள்

10 இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்று
மயக்கற வகுத்த சீர்மூன் றாகும்.

### இயற்சீர்

11 ஈரசை கூடிய சீர்இயற் சீர்;அவை
ஈரிரண் டென்ப இயல்புணர்ந் தோரே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

9 *" ஐயென் நெடுஞ்சினை ஆதி ஒழித்தல(கு)*
*எய்தும் இணையசை என்றிசி னோரே. "* *—காக்கைபாடினியார்*
**(விருத்தியுரை ப. 54)**

*" இடையும் கடையும் இணையும் ஐஎழுத்தே. "*
*—சிறுகாக்கைபாடினியார்*
**(விருத்தியுரை ப. 55)**

10 *" இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்னும்*
*நிகழ்ச்சிய என்ப நின்ற மூன்றும். "* *—மயேச்சுரர்*
**(விருத்தியுரை ப. 58)**

11 *" ஒரோஒ வகையினால் ஆகிய ஈரசைச்*
*சீரியற் சீரெனச் செப்பினர் புலவர். "*

*" இயற்சீர் எல்லாம் ஆசிரிய உரிச்சீர். "* *—காக்கைபாடினியார்*
**(விருத்தியுரை ப. 60)**

**ஒத்த காரிகை இலக்கணம்**

9 *" ஐகார நேரேவல் ஒருங் குறிலியல் "* (கா. 36)

10 —

11 *" ஈரசை நாற்சீர் அகவற் குரிய "* (கா. 6)

### உரிச்சீர்

12 மூவசைச் சீர்உரிச் சீர்இரு நான்கனுள்
நேரிறு நான்கும் வெள்ளை; அல்லன
பாவினுள் வஞ்சியின் பாற்பட் டனவே.

### பொதுச்சீர்

13 நாலசைச் சீர்பொதுச் சீர்பதி னாறே.

### ஓரசைச்சீர்

14 ஓரசைச் சீருமஃ(து) ஓரிரு வகைத்தே.

---

## ஒத்த முன்னை இலக்கணம்

12 " மூவசை யான்முடி வெய்திய எட்டனுள்
அந்தம் தனியசை வெள்ளை; அல்லன
வஞ்சிக் கிழமை வகைப்பட் டனவே. " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 63)

13, 14 " ஈரசைச்சீர் பின்முன் னாவைத் துறழ்ந்து
மாறியக்கால் நாலசைச் சீர்பதி னாறாம். " —அவிநயனார்
(விருத்தியுரை ப. 64)

" நாலசை யானும் நடைபெறும்; ஓரசை
சீர்நிலை எய்தலும் சிலவிடத் துளவே. " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 67)

## ஒத்த காரிகை இலக்கணம்

12 " ... ... ... வெண்பாவினவாம்
நேரசை யாலிற்ற மூவசைச் சீர்நிரை யானிறுப
... ... ... வகுத்தவஞ் சிக்குரிச்சீர் " (கா. 6)

13, 14 " ஓரசை யேநின் றுஞ் சீராம் பொதுவொரு நாலசையே. " (கா. 6)

### சீர்கள் செய்யுளுள் நிற்கும் முறை

15 விரவியும் அருகியும் வேறும் ஒரோவழி
மருவியும் பெறாதும் வழங்குமன் அளவையே

### நேர்நடு வஞ்சியுரிச்சீர் கலியுள்ளும் ஆசிரியத்துள்ளும் வருதல்

16 நிரை நடு இயலா வஞ்சி உரிச்சீர்
கலியினோ(டு) அகவலிற் கடிவரை இலவே.

சீரோத்து முற்றும்.

---

## ஒத்த முன்னை இலக்கணம்

*15* " இயற்சீர் உரிச்சீர் எனவிரு சீரும்
மயக்க முறைமையின் நால்வகைப் பாவும்
இனத்தின் மூன்றும் இனிதின் ஆகும். "

" உரிச்சீர் விரவ லாயு மியற்சீர்
நடக்குந ஆசிரி யத்தொடு வெள்ளை
அந்தம் தனியாய் இயற்சீர் கலியொடு
வஞ்சி மருங்கின் மயங்குதல் இலவே. "

" நாலசை யானடை பெற்றன வஞ்சியுள்
ஈரொன் றிணைதலும் ஏனுழி ஒன்றுசென்
றாகலும் அந்தம் இணையசை வந்தன
கூறிய வஞ்சிக் குணத்த ஆகலும்
ஆகுந என்ப அறிந்திசி னோரே. "

—காக்கைபாடினியார்
*(விருத்தியுரை ப. 69, 70)*

*16* "நிரை நடு வியலா வஞ்சி உரிச்சீர்
வருதல் வேண்டும் ஆசிரிய மருங்கின்"

—மயேச்சுரர்

" இவர்களும் [மயேச்சுரர் உள்ளிட்டோர்] இலேசு எச்ச உம்மை விதப்பாற் கலிப்பாவினுள்ளும் உடம்பட்டாரென்க. "

*(விருத்தியுரை ப. 84)*

## ஒத்த காரிகை இலக்கணம்

*15* ———

*16* " ... ... கலிப்பாவின் விளங்கனிவந்(து)
ஆம்சீர் அடையா அகவ லகத்தும் "

(கா. 38)

## 4. தளை ஓத்து

### தளை

17 சீரோடு சீர்தலைப் பெய்வது தளை; அவை
ஏழென மொழிப இயல்புணர்ந் தோரே.

### வெண்டளை

18 வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்
என்றிரண் டென்ப வெண்டளைக் கியல்பே.

### ஆசிரியத்தளை

19 ஈரசைச் சீர்நின்(று) இனிவரும் சீரொடு
நேரசை ஒன்றல் நிரையசை ஒன்றலென்(று)
ஆயிரு வகைத்தே ஆசிரி யத்தளை.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

17 *" செயற்குரி இருசீர் செய்யுள் நடப்புழித்*
*தலைப்பெய நிற்பது தளையெனப் படுமே "*

விருத்தியுரை மேற்கோள் ப. 85

18 *" இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்*
*விகற்ப நடையது வெண்டளை ஆகும். "*

*" உரிச்சீ ரதனுள் உரைத்ததை அன்றிக்*
*கலக்கும் தளையெனக் கணடிசி னோரே. "* —காக்கைபாடினியார்

(விருத்தியுரை ப. 94)

*" இயற்சீர் ஒன்றா நிலையது வெண்டளை;*
*உரிச்சீர் அதனுள் ஒன்றிய தியல்பே. "* —சிறுகாக்கைபாடினியார்

(விருத்தியுரை ப. 95)

19 *" நேரும் நிரையுமாம் இயற்சீர் ஒன்றின்*
*யாவரும் அறிப ஆசிரி யத்தளை. "* —மயேச்சுரர்

(விருத்தியுரை ப. 95)

**ஒத்த காரிகை இலக்கணம்**

17 *" தன்சீர் தனதொன்றில் தன்தளை யாம்தணவாத "* (கா. 10)

*" ஏழ்தளை "* (கா. 44)

18, 19 *" தன்சீர் தனதொன்றில் தன்தளை யாம்தணவாத......*
*... ... ... வெண்டளையாம்*
*ஒண்சீர் அகவ லுரிச்சீர் விகற்பமும் ஒண்ணுதலே. "* (கா. 10)

### கலித்தளை

20 நிரையீ றில்லா உரிச்சீர் முன்னர்
நிரைவருங் காலைக் கலித்தளை ஆகும்.

### வஞ்சித்தளை

21 தன்சீர் இறுதி நிரையொடு நேர்வரின்
வஞ்சித் தளையின் வகையிரண் டாகும்.

### தளை மயக்கம்

22 வெள்ளையுட் பிறதளை விரவா; அல்லன
எல்லாத் தளையும் மயங்கியும் வழங்கும்.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

*20* " வெண்சீர்ப் பின்னர் நிரைவருங் காலைக்
கண்டனர் புலவர் கலித்தளை யாக. " —மயேச்சுரர்
**(விருத்தியுரை ப. 95)**

*21* " தன்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முளொத்
தொன்றினும் ஒன்றா தொழியினும் வஞ்சியின்
பந்தம் எனப்பெயர் பகரப் படுமே. " —காக்கைபாடினியார்
**(விருத்தியுரை ப. 95)**

22 " — பாவினும்
வெண்பா ஒழித்துத் தளைவிரவும்." —நாலடி நாற்பது
**(விருத்தியுரை ப. 102)**

**ஒத்த காரிகை இலக்கணம்**

20, 21 " தன்சீர் தனதொன்றில் தன்தளை யாம்தண் வாதவஞ்சி
வண்சீர் விகற்பமும் வஞ்சிக் குரித்துவல் லோர்வகுத்த
வெண்சீர் விகற்பம் கலித்தளை யாய்விடும். " (கா. 10)

22 " அல்லாத வெல்லாம்
தாம்சீர் மயங்கும் தளையுமஃ தேவெள்ளைத் தன்மைகுன்றிப்
போம்சீர் கனிபுகிற் புல்லாது அயற்றளை " (கா. 38)

## 5. அடி ஓத்து

### அடி வகைகள்

23 குறளடி சிந்தடி அளவடி நெடிலடி
கழிநெடில் அடியெனக் கட்டுரைத் தனரே.

### முதல் நான்கு அடிகள்

24 குறளடி சிந்தடி இருசீர் முச்சீர்;
அளவடி நெடிலடி நாற்சீர் ஐஞ்சீர்;
நிரல்நிறை வகையால் நிறுத்தனர் கொளலே.

### கழிநெடிலடி

25 கழிநெடி லடியே கசடறக் கிளப்பின்
அறுசீர் முதலா ஐயிரண்டு ஈறா
வருவன பிறவும் வகுத்தனர் கொளலே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

23 " குறள்சிந் தளவுநெடில் கழிநெடில் என்றாங்(கு)
அனைவகை மரபின அடிவகை தானே " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 105)

24, 25 " இருசீர் குறளடி; சிந்தடி முச்சீா;
அளவடி நாற்சீர்; ஐஞ்சீர் நெடிலடி;
அறுசீர் கழிநெடில் ஆகு மென்ப. "

" எண்சீர் எழுசீர் இவையாம் கழிநெடிற்(கு)
ஒன்றிய என்ப உணர்ந்திசி னோரே. " —காக்கைபாடினியார்
(காரிகையுரை, கா. 12)

" இரண்டு முதலா எட்டீ றாகத்
திரண்ட சீரான் அடிமுடி வுடைய;
இறந்தன வந்து நிறைந்தடி முடியினும்
சிறந்த அல்ல செய்யு ளுள்ளே. " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 108)

**ஒத்த காரிகை இலக்கணம்**

23 —

24, 25 " குறளிரு சீரடி சிந்துமுச் சீரடி நாலொருசீர்
அறைதரு காலை அளவொடு நேரடி ஐயொருசீர்
நிறைதரு பாத நெடிலடி யாநெடு மென்பணைத்தோட்
கறைகெழு வேற்கணல் லாய்மிக்க பாதங் கழிநெடிலே. கா. 12

### வஞ்சிப் பாவிற்குரிய அடிகள்

26 சிந்தடி குறளடி என்றிரண் டடியான்
வஞ்சி நடக்கும் என்மனார் புலவர்.

### பிற மூன்று பாக்களுக்குரிய அடிகள்

27 கலியொடு வெண்பா அகவல் கூறிய
அளவடி தன்னால் நடக்குமன் அவையே.

### பாவினங்களுக்கு உரிய அடி

28 பாவினம் எல்லா அடியினும் நடக்கும்.

---

## ஒத்த முன்னை இலக்கணம்

26 " *சிந்தடி குறளடி என்றா யிரண்டும்*
*வஞ்சிக் கிழமை வகைப்பட் டனவே.* " —காக்கைபாடினியார்
**(விருத்தியுரை ப. 115)**

27 " *ஆசிரியம் வெண்பாக் கலியொடு மும்மையும்*
*நாற்சீர் அடியால் நடைபெற் றனவே.* " —காக்கைபாடினியார்
**(விருத்தியுரை ப. 117)**

28 " விருத்தம் துறையொடு தாழிசை என்றா
இனச்செய்யுள் எல்லா அடியினும் நடக்கும். "
—காக்கைபாடினியார்
**(விருத்தியுரை ப. 119)**

## ஒத்த காரிகை இலக்கணம்

26 " வஞ்சியென்னும்
ஒண்பா அடிகுறள் சிந்து என்றுரைப்ப " (கா. 21)

27 " வெண்பா அகவல் கலிப்பா அளவடி " (கா. 21)

28 —

### ஆசிரியப்பாவில் பிற பாவடிகள் மயங்குதல்

29 இயற்சீர் வெள்ளடி வஞ்சி அடியிவை
அகப்பட வருஉம் அகவலும் உளவே.

### கலிப்பாவில் பிற பா விரவுதல்

30 வெள்ளடி கலியினுள் விரவவும் பெறுமே.

### வஞ்சிப்பாவில் பிற பா மயங்குதல்

31 வஞ்சியுள் அகவல் மயங்கினும் வரையார்.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

29 *" வஞ்சி விரவல் ஆசிரியம் உரித்தே.*
*வெண்பா விரவினும் கடிவரை யின்றே, "* —பல்காயனார்
*(காரிகையுரை கா. 39)*

30, 31 *" ஆசிரியப் பாவின் அயற்பா அடிமயங்கும்*
*ஆசிரியம் வெண்பா கலிக்கண்ணாம்—ஆசிரியம்*
*வெண்பாக் கலிவிரவும் வஞ்சிக்கண் வெண்பாவின்*
*ஒண்பா அடிவிரவா உற்று. "* —நாலடி நாற்பது
*(விருத்தியுரை ப. 129)*

**ஒத்த காரிகை இலக்கணம்**

29, 30, 31

*" இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாதம் அகவலுள்ளான்*
*மயக்கப் படாஅல்ல வஞ்சி மருங்கின்ஈஞ் சாஅகவல்*
*கயற்கணல் லாய்கலிப் பாதமு நண்ணுங் கலியினுள்ளான்*
*முயக்கப் படும்முதற் கால்இரு பாவும் முறைமையினே. "* (கா. 39)

### ஒவ்வொரு பாவிற்கும் அடிச்சிறுமை

32 ஈரடி வெண்பாச் சிறுமை; மூவடி
ஆசிரி யத்தொடு வஞ்சி; எஞ்சிய(து)
ஈரிரண் டடியே இழிபென மொழிப.

அடியோத்து முற்றும்.

## 6. தொடை ஓத்து

### தொடை

33 தொடையே அடியிரண்(டு) இயையத் தோன்றும்.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

32 " ஒருதொடை ஈரடி வெண்பாச் சிறுமை;
இருதொடை மூன்றாம் அடியின் இழிந்து
வருவன ஆசிரியம் இல்லென மொழிப;
வஞ்சியும் அப்பா வழக்கின ஆகும்."

" நான்காம் அடியினும் மூன்றாம் தொடையினும்
தாழ்ந்த கலிப்பாத் தழுவுதல் இலவே." —காக்கைபாடினியார்
**(விருத்தியுரை ப. 130)**

33 " அடுத்த அடியிரண்(டு) யாவகைப் பாவினும்
தொடுத்து வழங்கலின் தொடையெனப் படுமே" —மயேச்சுரர்
**(விருத்தியுரை ப. 136)**

**ஒத்த காரிகை இலக்கணம்**

32 " வெள்ளைக்(கு) இரண்டடி வஞ்சிக்கு மூன்றடி மூன்றுஅகவற்(கு)
எள்ளப் படாக்கலிக்(கு) ஈரிரண் டாகும் இழிபு." (கா. 14)

33 —

## தொடை வகைகள்

34 மோனை எதுகை முரண் இயை(பு) அளபெடை
பாதம் இணையே பொழிப்போ(டு) ஒரூஉத்தொடை
கூழை கதுவாய் மிசையதூஉம் கீழதூஉம்
சீரிய முற்றொடு சிவணுமார் அவையே.

## அடிமோனைத் தொடை

35 ஆதி எழுத்தே அடிதொறும் வரின்அடி
மோனைத் தொடையென மொழிமனார் புலவர்.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

34 " மோனை எதுகை முரணே அளபெடை
ஏனைச் செந்தொடை இயைபே பொழிப்பே
ஒரூஉவே இரட்டை ஒன்பதும் பிறவும்
வருவன விரிப்பின் வரம்பில என்ப. " —பல்காயனார்
**(விருத்தியுரை ப. 184)**

" அவைதாம்,

முதலோ டயல்கொள்வ திணை; அயல்இன்றி
மூன்றாஞ் சீரது பொழிப்பிரண் டிடையிட்(டு)
இறுதியொடு கொள்வ தொரூஉ; இறுதிச்
சீரொழித் தேனைய தோன்றிற் கூழை;
முதலீ றடைந்தவற் றின்மை இருவகைக்
கதுவாய்; முற்றும் நிகழ்வது முற்றே;
முதலொடெட் டாகும் என்மனார் புலவர் " —பரிமாணனார்
**(விருத்தியுரை ப. 183)**

35 " முதலெழுத் தொன்றுவ மோனை. " —பல்காயனார்
**(விருத்தியுரை ப. 141)**

**ஒத்த காரிகை இலக்கணம்**

34 —

35 " எழுவாய் எழுத்தொன்றின் மோனை. " (கா. 16)

### அடியெதுகைத் தொடை

36 இரண்டாம் எழுத்தொன் றியைவதே எதுகை.

### வருக்கம், நெடில், இனம் ஆகிய மோனை எதுகைகள்

37 வருக்க நெடில்இனம் வரையார் ஆண்டே.

### முரண்தொடை

38 மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே.*

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

36 " எதுகை
முதலெழுத் தளவோ டொத்தது முதலா
அதுவொழித் தொன்றின் ஆகும் என்ப. " —பல்காயனார்
(விருத்தியுரை ப. 141)

37 " அடிதொறு முதலெழுத் தடைவதை முதற்றொடை,
இடையதன் முன்னொன் றியைவதை எதுகை;
நெடிய பிறவும் இனத்தினும் ஆகும். "
(விருத்தியுரை மேற்கோள் ப. 147)

38 ' மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே. ' —தொல்.செய்.91

' பொருளினும் மொழியினும் முரணுதல் முரணே. ' —பல்காயனார்
(விருத்தியுரை ப. 158)

**ஒத்த காரிகை இலக்கணம்**

36 " இரண்டாம்
வழுவா எழுத்தொன் றின்மாதே எதுகை. " (கா. 16)

37 " வருக்கம் நெடில்இனம் வந்தால் எதுகையும் மோனையுமென்று
ஒருக்கப் பெயரால் உரைக்கப்படும். " (கா. 41)

38 " மறுதலைத்த
மொழியான் வரினும் முரண் " (கா. 16)

*இந்நூற்பா தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பா (நூ. 91) வாகும். இந்நூலில் ஆசிரியமொழியாக ஆளப்பெற்றுள்ளது.

### முரண்தொடை விகற்பம்

39 கடையிணை பின்முரண் இடைப்புணர் முரணென
இவையும் கூறுப ஒருசா ரோரே.

### அடி இயைபுத் தொடை

40 இறுவாய் ஒப்பினஃ(து) இயைபெனப் படுமே.

### அடி அளபெடைத் தொடை

41 அளபெடை ஒன்றுவ(து) அளபெடைத் தொடையே.

---

## ஒத்த முன்னை இலக்கணம்

39 ————

40 " இறுவாய் ஒப்பினஃ தியைபென மொழிப. " —தொல். செய். 92

" இயைபே இறுசீர் ஒன்றும் என்ப. " —பல்காயனார்
(விருத்தியுரை ப. 166)

41 ' அளபெடைத் தொடைக்கே அளபெடை ஒன்றும் ' —நற்றத்தனார்
(விருத்தியுரை ப. 169)

## ஒத்த காரிகை இலக்கணம்

39 " மற்றொருசார்
கருதில் கடையே கடையிணை பின்கடைக் கூழையுமென்(று)
இரணத் தொடைக்கு மொழிவர் இடைப்புணர் என்பதுவே. "
(கா. 40)

40 " இறுதி இயைபு " (கா. 16)

41 " முதன்மொழிக்கண்
அழியா(து) அளபெடுத்(து) ஒன்றுவ(து) ஆகும் அளபெடையே. "
(கா. 16)

### இணைத் தொடை

42 இருசீர் மிசைவரத் தொடுப்ப(து) இணையே.

### பொழிப்புத் தொடை

43 முதலொடு மூன்றாஞ் சீர்த்தொடை பொழிப்பே.

### ஒரூஉத் தொடை

44 சீரிரண்(டு) இடைவிடத் தொடுப்ப(து) ஒரூஉத்தொடை.

### கூழைத் தொடை

45 மூவொரு சீரும் முதல்வரத் தொடுப்பது
கூழை என்மனார் குறியுணர்ந் தோரே.

### மேற்கதுவாய்த் தொடை

46 முதலயற் சீரொழித்(து) அல்லன மூன்றின்
மிசைவரத் தொடுப்பது மேற்கது வாயே.

### கீழ்க்கதுவாய்த் தொடை

47 ஈற்றயற் சீரொழித்(து) எல்லாம் தொடுப்பது
கீழ்க்கது வாயின் கிழமைய தாகும்.

### முற்றுத் தொடை

48 சீர்தொறும் தொடுப்பது முற்றெனப் படுமே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

42—48 " *முதலோ டயல்கொள்வ திணை; அயல்இன்றி*
*மூன்றாஞ் சீரது பொழிப்பிரண் டிடையிட்*
*டிறுதியொடு கொள்வ தொரூஉ; இறுதிச்*
*சீரொழித் தேனைய தோன்றிற் கூழை;*
*முதலீ றடைந்தவற் றின்மை இருவகைக்*
*கதுவாய்; முற்றும் நிகழ்வது முற்றே;*
*முதலொடெட் டாகும் என்மனார் புலவர்* "

—பரிமாணனார்
**(விருத்தியுரை ப. 183)**

**ஒத்த காரிகை இலக்கணம்**

42—48 " இருசீர் மிசைஇணை யாகும் பொழிப்பிடை யிட்டொரூஉவாம்
இருசீர் இடையிட்ட(து) ஈறிலி கூழை முதலிறுவாய்
வருசீர் அயலில மேல்கீழ் வகுத்த மைதீர்கதுவாய்
வருசீர் முழுவதும் ஒன்றின்முற் றாம்என்ப மற்றவையே. " (கா. 19)

## செந்தொடை, இரட்டைத்தொடை, அந்தாதித்தொடை

49 செந்தொடை இரட்டையொ(டு) அந்தாதி எனவும்
வந்த வகையான் வழங்குமன் பெயரே.

### செந்தொடை

50 செந்தொடை ஒவ்வாத் திறத்தன ஆகும்.

### இரட்டைத்தொடை

51 இரட்டை அடிமுழு(து) ஒருசீர் இயற்றே.

### அந்தாதித் தொடை

52 ஈறு முதலாத் தொடுப்ப(து) அந் தாதியென்(று)
ஓதினர் மாதோ உணர்ந்திசி னோரே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

49 " ... ... ... ... ...
ஏனைச் செந்தொடை இயைபே பொழிப்பே
ஒரூஉவே இரட்டை ஒன்பதும் பிறவும்
வருவன விரிப்பின் வரம்பில என்ப. " —பல்காயனார்
(விருத்தியுரை ப. 184)

50 " மாறல(து) ஒவ்வா மரபின செந்தொடை " —அவிநயனார்
(விருத்தியுரை ப. 188)

51 " ஒருசீர் அடிமுழு தாயின் இரட்டை " —அவிநயனார்
(விருத்தியுரை ப. 190)

52 ' அடியும் சீரும் அசையும் எழுத்தும்
முடிவு முதலாச் செய்யுள் மொழியின.ஃ(து)
அந்தாதித் தொடையென் றறிதல் வேண்டும் " —நத்தத்தனார்
(காரிகையுரை, கா. 17)

**ஒத்த காரிகை இலக்கணம்**

49—52 " அந்தம் முதலாத் தொடுப்ப(து) அந்தாதி அடிமுழுதும்
வந்த மொழியே வருவ(து) இரட்டை வரன்முறையான்
முந்திய மோனை முதலா முழுதுமொவ் வாதுவிட்டால்
செந்தொடை நாமம் பெறுநறு மென்குழல் தேமொழியே. " (கா. 17)

### ஒரு செய்யுட்கண் தொடை தளைகளிற் பல விரவிவரின் அவற்றை வழங்குமாறு

53 தொடைபல தொடுப்பினும் தளைபல விரவினும்
முதல்வந் ததனால் மொழிந்திசிற் பெயரே.

தொடையோத்து முற்றும்.

உறுப்பியல் முற்றும்.

## செய்யுள் இயல்

### செய்யுள் வகை

54 செய்யுள் தாமே மெய்பெற விரிப்பின்
பாவே பாவினம் என இரண் டாகும்.

### பாக்களின் பெயர்கள்

55 வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சிஎனப்
பண்பாய்ந் துரைத்த பாநான் காகும்.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

53 " தொடையடி யுட்பல வந்தால் எழுவாய்
உடையத னாற்பெயர் ஒட்டப் படுமே. " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 197)

" மயங்கிய தொடைமுதல் வந்ததன் பெயரால்
இயங்கினும் தளைவகை இன்னணம் ஆகும். " —அவிநயனார்
(விருத்தியுரை ப. 197)

54 —

55 " ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற்(று) என்ப பாவகை விரியே. " தொல். செய். 101

**ஒத்த காரிகை இலக்கணம்**

53, 54, 55 —

### பாவினங்களின் பெயரும் வைப்பு முறையும்

56 தாழிசை துறையே விருத்தம் என் றுஇவை
பாவினம் பாவொடு பாற்பட் டியலும்.

## வெண்பாவியல்

### வெண்பா

57 செப்பல் இசையன வெண்பா; மற்றவை
அந்தடி சிந்தடி ஆகலும், அவ்வடி
அந்தம் அசைச்சீர் ஆகலும் பெறுமே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

56 *" பாவே தாழிசை துறையே விருத்தமெனா
நால்வகைப் பாவும் நானான் காகும் "* —சிறுகாக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 211)

*" பாவினங்களை 'விருத்தம், துறை, தாழிசை' என்று காக்கைபாடினியார் வைத்த முறையானே வையாது, 'தாழிசை, துறை, விருத்தம்' என்று தமது மதம் படுத்து முறை பிறழச் சொன்னாரல்லர் இந்நூலுடையார்; சிறுகாக்கைபாடினியார் முதலாகிய ஒருசார் ஆசிரியர் வைத்த முறை பற்றிச் சொன்னாராகலின், குற்றம் இல்லை என்று கொள்க. "*

(விருத்தியுரை ப. 222)

57 *" சிறந்துயர் செப்பல் இசையன வாகி,
அறைந்த உறுப்பின் அகறல் இன்றி,
விளங்கிக் கிடப்பது வெண்பா வாகும். "*

*" சிந்தடி யானே இறுதலும், அவ்வடி
அந்தம் அசைச்சீர் வருதலும், யாப்புற
வந்தது வெள்ளை வழக்கியல் தானே. "* —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 225)

**ஒத்த காரிகை இலக்கணம்**

56 —

57 *" வெண்பா...... அளவடி; ஒலி......
திண்பா மலிசெப்பல்...... "* (கா. 21)

*" நிகரில்வெள்ளைக்
கோரசைச் சீரும் ஒளிசேர் பிறப்பும்ஒண் காசும்இற்ற
சீருடைச் சிந்தடி யேமுடி வாமென்று தேறுகவே. "* (கா. 25)

### வெண்பா வகைகள்

58 குறள்சிந்(து) இன்னிசை நேரிசை பஃறொடை
எனஐந் தாகும் வெண்பாத் தானே.

### குறள் வெண்பாவும் சிந்தியல் வெண்பாவும்

59 ஈரடி குறள்;சிந்(து) இருதொடை இயற்றே.

### நேரிசைவெண்பா

60 நாலோர் அடியாய்த் தனிஇரண் டாவதன்
ஈறுஒரூஉ வாய்முற் றிருவிகற் பொன்றினும்
நேரிசை வெண்பா எனப்பெயர் ஆகும்.

---

## ஒத்த முன்னை இலக்கணம்

58 —

59 " தொடையொன்(று) அடியிரண் டாகி வருமேற்
குறளின் பெயர்க்கொடை கொள்ளப் படுமே. "—காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 238)

" ஈரடி இயைந்தது குறள்வெண் பாவே. " —அவிநயனார்
(விருத்தியுரை ப. 238)

" நேரிசைச் சிந்தும் இன்னிசைச் சிந்தும்என்(று)
ஈரடி முக்கால் இருவகைப் படுமே. "
—விருத்தியுரை மேற்கோள் ப. 239

60 " இரண்டாம் அடியின் ஈற்றொரூஉ எய்தி
முரண்ட எதுகை ஆகியும், ஆகா(து)
இரண்டு துணியாய் இடைநனி போழ்ந்தும்
நிரந்தடி நான்கின நேரிசை வெண்பா " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 243)

## ஒத்த காரிகை இலக்கணம்

58 —

59 " ஈரடி வெண்பாக் குறள் " (கா. 23)

" நேரிசை இன்னிசை போல நடந்தடி மூன்றின்வந்தால்
நேரிசை இன்னிசைச் சிந்தியலாகும் " (கா. 25)

60 " குறட்பா இரண்டு ஆயிடைக்கண்
சீரிய வான்தனிச் சொல்லடி மூய்ச்செப்பல் ஓசைகுன்றா(து)
ஓரிரண் டாயும் ஒருவிகற் பாயும் வருவதுண்டேல்
நேரிசை யாகும். " (கா. 23)

### இன்னிசை வெண்பா

61 விகற்பொன் றாகியும் மிக்கும் தனிச்சொல்
இயற்றப் படாதன இன்னிசை வெண்பா.

### பஃறொடை வெண்பா

62 பாதம் பலவரின் பஃறொடை வெண்பா.

## வெண்பாவின் இனம்

### குறள்வெண்பாவின் இனம்

### வெண்செந்துறை

63 ஒழுகிய ஓசையின் ஒத்தடி இரண்டாய்
விழுமிய பொருளது வெண்செந் துறையே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

61 "தனிச்சொல் தழுவல வாகி, விகற்பம்
பலபல தோன்றினும் ஒன்றே வரினும்
இயற்பெயர் இன்னிசை என்றிசி னோரே." —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 245)

62 "தொடைஅடி இத்துணை என்னும் வழக்கம்
உடையதை இன்றி உறுப்பழி வில்லா
நடையது பஃறொடை நாமம் கொளலே." —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 250)

63 "அந்தம் குறையா(து) அடியிரண் டாமெனில்
செந்துறை என்னும் சிறப்பின தாகும்." —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 253)

**ஒத்த காரிகை இலக்கணம்**

61 "ஒன்றும் பலவும் விகற்பொடு நான்கடி யாய்த்தனிச்சொல்
இன்றி நடப்பின்அஃ(து) இன்னிசை துன்னும்." (கா. 24)

62 "அடிபலவாய்ச்
சென்று நிகழ்வ பஃறொடை யாம்." (கா. 24)

63 "அந்தமில் பாதம் அளவிரண்(டு) ஒத்து முடியின்வெள்ளைச்
செந்துறை யாகும்." (கா. 26)

### குறட்டாழிசை

64 அந்தடி குறைநவும் செந்துறைச் சிதைவும்
சந்தழி குறளும் தாழிசைக் குறளே.

### குறட்பாவின் இனம்

65 உரைத்தன இரண்டும் குறட்பா இனமே.

### வெண்டாழிசை

66 அடியொரு மூன்றுவந்(து) அந்தடி சிந்தாய்
விடினது வெள்ளொத் தாழிசை யாகும்.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

64 —

65 —

66 " தன்பா அடித்தொகை மூன்றாய் இறும்படி
வெண்பாப் புரைய இறுவது வெள்ளையின்
தண்பா இனங்களிற் றாழிசை யாகும். " —காக்கைபாடினியார்
**(விருத்தியுரை ப. 258)**

" அடிமூன் றாகி வெண்பாப் போல
இறுவ தாயின் வெள்ளொத் தாழிசை " —அவிநயனார்
**(விருத்தியுரை ப. 258)**

**ஒத்த காரிகை இலக்கணம்**

64 " சீர்பலவாய்
அந்தங் குறைநவுஞ் செந்துறைப் பாட்டின் இழிபும்அங்கேழ்
சந்தஞ் சிதைந்த குறளுங் குறளினத் தாழிசையே. " (கா. 26)

65 —

66 " வெண்டாழிசையே
மூன்றடி யாய்வெள்ளை போன்றிறும். " (கா. 27)

### வெண்டுறை

67 மூன்றடி முதலா ஏழடி காறும்வந்(து)
ஈற்றடி சிலசில சீர்தப நிற்பினும்
வேற்றொலி விரவினும் வெண்டுறை யாகும்.

### வெளிவிருத்தம்

68 நான்குஅடி யானும் நடைபெற்(று) அடிதொறும்
தான்தனிச் சொற்கொளின் வெளிவிருத் தம்மே.

வெண்பாவும் அதன் இனமும்
முற்றும்.

---

### ஒத்த முன்னை இலக்கணம்

67 " அடிஐந் தாகியும் மிக்கும் ஈற்றடி
ஒன்றும் இரண்டும் சீர்தப வரினும்
வெண்டுறை என்னும் விதியின வாகும். " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 260)

" இவர்களும் [ காக்கைபாடினியார் உள்ளிட்டோர் ] விதப்பான் மூன்றடி முதலா ஏழடிகாறும் இவ்வாறே உடன்பட்டார் எனக்கொள்க. "

(விருத்தியுரை ப. 261)

68 " ஒருமூன்று ஒருநான்கு அடியடி தோறும்
தனிச்சொற் றழுவி நடப்பன வெள்ளை
விருத்தம் எனப்பெயர் வேண்டப் படுமே. " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 263)

### ஒத்த காரிகை இலக்கணம்

67 " மூன்றுஇழிபு ஏழுஉயர்வாய்
ஆன்றுஅடி தாம்சில அந்தம் குறைந்திறும் வெண்டுறையே " (கா. 27)

68 " மூன்றடி யானும் முடிந்துஅடி தோறும் முடிவிடத்துத்
தான்தனிச் சொல்பெறும் தண்டா விருத்தம். " (கா. 27)

# ஆசிரியப்பாவியல்

## ஆசிரியப்பா

69 அகவல் இசையன அகவல்; மற்றவை
ஏ ஓ ஈ ஆய் என் ஐ என் றிறுமே.

## ஆசிரியப்பாவின் வகைகள்

70 நேரிசை இணைக்குறள் மண்டிலம் நிலைப்பெயர்
ஆகுமண் டிலமென்(று) அகவல் நான்கே.

---

### ஒத்த முன்னை இலக்கணம்

69 " தன்பால் உறுப்புத் தழுவிய மெல்லிய
இன்பா அகவல் இசையதை இன்னுயிர்க்
கன்பா வறைந்த ஆசிரியம் என்ப. "

" ஏயெனச் சொல்லின் ஆசிரியம் இறுமே;
ஓ ஆய் என ஒரோவழி ஆகும். "

" என்னென் சொல்லும் பிறவும் ஒன்றித்
துன்னவும் பெறாஉம் நிலைமண் டிலமே. "

—அவிநயனார்
(விருத்தியுரை ப. 267)

70 " நேரிசை இணைநிலை மண்டிலம் மண்டிலம்
ஈரிரண் டியல எண்ணுங் காலை. "

-விருத்தியுரை மேற்கோள்
(ப. 269)

### ஒத்த காரிகை இலக்கணம்

69 " ... ... அகவல் ... ... ஒலி ......
... .. சீர்சால் அகவல் ... ... " (கா. 21)

அகவற்பா ஈறு:—

70 —

### நேரிசை ஆசிரியப்பா

71 அந்த அடியின் அயலடி சிந்தடி
வந்தன நேரிசை ஆசிரி யம்மே.

### இணைக்குறள் ஆசிரியப்பா

72 இணைக்குறள் இடைபல குறைந்திறல் இயல்பே.

### அடிமறி மண்டில ஆசிரியப்பா

73 மனப்படும் அடிமுத லாய்இறின் மண்டிலம்.

### நிலைமண்டில ஆசிரியப்பா

74 ஒத்த அடியின ஆகியும் ஒற்றிற
நிற்பவும் என்னும் நிலைமண் டிலமே.

---

## ஒத்த முன்னை இலக்கணம்

71 *" இற்றதன் மேலடி ஒருசீர் குறைய
நிற்பது நேரிசை ஆசிரி யம்மே. "* —அவிநயனார்
**(விருத்தியுரை ப. 270)**

72 *" அளவடி அந்தமும் ஆதியும் ஆகிக்
குறளடி சிந்தடி என்றா யிரண்டும்
இடைவர நிற்ப(து) இணைக்குறள் ஆகும். "* —காக்கைபாடினியார்
**(விருத்தியுரை ப. 273)**

*" இடைபல குறைவ(து) இணைக்குற ளாகும். "* —அவிநயனார்
**(விருத்தியுரை ப. 272)**

73 *" உரைப்போர் குறிப்பின் உணர்வகை அன்றி
இடைப்பால் முதலீறு என்றிவை தம்முள்
மதிக்கப் படாதது மண்டில யாப்பே. "* —காக்கைபாடினியார்
**(விருத்தியுரை ப. 274)**

74 *" ஒத்த அடித்தாய் உலையா மண்டிலம்
என்னென் கிளவியை ஈறா கப்பெறும்;
அன்ன பிறவுமந் நிலைமண் டிலமே. "* —அவிநயனார்
**(விருத்தியுரை ப. 276)**

## ஒத்த காரிகை இலக்கணம்

71—74 *" கடையயல் பாதம்மூச் சீர்வரின் நேரிசை காமருசீர்
இடைபல குன்றின் இணைக்குறள் எல்லா அடியுமொத்து
நடைபெறு மாயின் நிலைமண் டிலம்நடுவு ஆதியந்தத்(து)
அடைதரு பாதத்(து) அகவல் அடிமறி மண்டிலமே. "* (கா. 28)

## ஆசிரியப்பாவினம்

### ஆசிரியத் தாழிசை

75 மூன்றடி ஒத்த முடிபின ஆய்விடின்
ஆன்ற அகவற் றாழிசை ஆகும்.

### ஆசிரியத்துறை

76 கடையதன் அயலடி கடைதபு நடையவும்
நடுவடி மடக்காய் நான்கடி யாகி
இடையிடை குறைநவும் அகவற் றுறையே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

75 " அடிமூன் றொத்திறின் ஒத்தா ழிசையே. " —சிறுகாக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 279)

76 " அடித்தொகை நான்குபெற் றந்தத் தொடைமேற்
கிடப்பது நாற்சீர்க் கிழமைய தாகி
எடுத்துரை பெற்ற இருநெடில் ஈற்றின்
அடிப்பெறின் ஆசிரி யத்துறை ஆகும். "

" அளவடி ஐஞ்சீர் நெடிலடி தம்முள்
உறழத் தோன்றி ஒத்த தொடையாய்
விளைவதும் அப்பெயர் வேண்டப் படுமே. " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 283)

**ஒத்த காரிகை இலக்கணம்**

" தருக்கியல் தாழிசை மூன்றடி ஒப்பன. " (கா. 29)

76 " நான்கடியாய்
எருத்தடி நைந்தும் இடைமடக் காயும் இடையிடையே
சுருக்கடி யாயும் துறையாம். " (கா. 29)

### ஆசிரிய விருத்தம்

77 கழிநெடில் அடிநான்(கு) ஒத்திறின் விருத்தமஃ(து)
அழியா மரபின் அகவல் ஆகும்.

ஆசிரியப்பாவும் அதன் இனமும்
முற்றும்.

## கலிப்பாவியல்

### கலிப்பா

78 துள்ளல் இசையன கலிப்பா; மற்றவை
வெள்ளையும் அகவலு மாய்விளை ந் திறுமே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

77 " அறுசீர் முதலா நெடியவை எல்லாம்
நெறிவயின் திரியா நிலத்தவை நான்காய்
விளைகுவ தப்பா இனத்துள விருத்தம். " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 288)

78 " வகுத்த உறுப்பின் வழுவுதல் இன்றி
எடுத்துயர் துள்ளல் இசையன வாகல்
கலிச்சொற் பொருளெனக் கண்டிசி னோரே. " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 291)

" பிறிதின் நடப்பினும் வஞ்சியும் கலியும்
இறுதி மருங்கின் ஆசிரி யம்மே. "

" கலியே வெண்பா வாயினும் வரையார். "

—விருத்தியுரை மேற்கோள் ப. 289

**ஒத்த காரிகை இலக்கணம்**

77 " குறைவில்தொல் சீர் அகவல்
விருத்தம் கழிநெடில் நான்குஒத் திறுவது. " (கா. 29)

78 " ... ... கலிப்பா ... ... ஒலி ... ...
... ... சென்றோங்கு துள்ளல் ... ... ." (கா. 21)

### கலிப்பா வகைகள்

79 ஒத்தா ழிசைக்கலி வெண்கலிப் பாவே
கொச்சகக் கலியொடு கலிமூன் றாகும்.

### ஒத்தாழிசைக் கலிப்பாவின் வகைகள்

80 நேரிசை அம்போ தரங்கம்வண் ணகமென்(று)
ஓதிய மூன்றே ஒத்தா ழிசைக்கலி.

### வெண்கலி கொச்சகக்கலிகளின் வரையறை

81 வெண்கலி ஒன்றே கொச்சகம் ஐந்தெனப்
பண்பறி புலவர் பாற்படுத் தனரே.

### நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா

82 தரவொன் றுதாழிசை மூன்றும் சமனாய்த்
தரவிற் சுருங்கித் தனிநிலைத் தாகிச்
சுரிதகம் சொன்ன இரண்டினுள் ஒன்றாய்
நிகழ்வது நேரிசை ஒத்தா ழிசையே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

79 *" வெண்கலி ஒத்தா ழிசைக்கலி கொச்சகம்*
*என்றொரு மூன்றே கலியென மொழிப. "* —காக்கைபாடினியார்
**(விருத்தியுரை ப. 293)**

*80, 81 —*

82 *" தரவே தாழிசை தனிநிலை சுரிதகம்*
*எனநான் குறுப்பின(து) ஒத்தா ழிசையே. "*
*" ஆசிரியம் வெண்பா எனவிவை தம்முள்*
*ஒன்றாகி அடிபெற் றிறுதி வருவது*
*சுழியம் எனப்பெயர் சுரிதக மாகும். "* —காக்கைபாடினியார்
**(விருத்தியுரை ப. 300)**

*" தரவொன் றாகித் தாழிசை மூன்றாய்த்*
*தனிச்சொல் இடைக்கிடந்து சுரிதகம் தழுவ*
*வைத்த மரபின தொத்தா ழிசைக்கலி "*
*" தரவின் அளவிற் சுரிதகம் அயற்பா*
*விரவும் என்ப ஆசிரியம் வெள்ளை. "* —மயேச்சுரர்
**(விருத்தியுரை ப. 300)**

**ஒத்த காரிகை இலக்கணம்**

*79, 80, 81 —*

82 *" தரவொன்று தாழிசை மூன்று தனிச்சொற் சுரிதகமாய்*
*நிரலொன் றின் நேரிசை ஒத்தா ழிசைக்கலி. "* (கா. 30)

### அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

83 முந்திய தாழிசைக்(கு) ஈறாய் முறைமுறை
ஒன்றினுக் கொன்று சுருங்கும் உறுப்பின(து)
அம்போ தரங்கவொத் தாழிசைக் கலியே.

### வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா

84 அவற்றொடு முடுகியல் அடியுடை அராகம்
மடுப்பது வண்ணக் ஒத்தா ழிசைக்கலி.

---

## ஒத்த முன்னை இலக்கணம்

83 " நீர்த்திரை போல நிரலே முறைமுறை
ஆக்கம் சுருங்கி அசையடி தாழிசை
விட்டிசை வீயத் தொடுத்துச் சுரிதகம்
தாக்கித் தவிர்ந்த தரவினோ டேனவும்
யாப்புற் றமைந்தன அம்போ தரங்கம். " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 306)

84 " அச்சொலப் பட்ட உறுப்பொ டராகவடி
வைத்த நடையது வண்ணகம் ஆகும். " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 313)

## ஒத்த காரிகை இலக்கணம்

83 " நீர்த்திரைபோல்
மரபொன்று நேரடி முச்சீர் குறள்நடு வேமடுப்பின்
... ... ... அது அம்போதரங்க ஒத்தாழிசையே. " (கா. 30)

84 " அசையடி முன்னர் அராகம்வந்(து) எல்லா உறுப்புமுண்டேல்
வசையறு வண்ணக ஒத்தாழிசைக் கலி. " (கா. 31)

### கலிவெண்பா

85 தன்தளை ஓசை தழீஇநின்(று) ஈற்றடி
வெண்பா இயலது கலிவெண் பாவே.

### கொச்சகக் கலிப்பா

86 தரவே தரவிணை தாழிசை தாமும்
சிலவும் பலவும் சிறந்து மயங்கியும்
மற்றும் விகற்பம் பலவாய் வருநவும்
கொச்சகம் என்னும் குறியின ஆகும்.

---

### ஒத்த முன்னை இலக்கணம்

85 "ஒருபொருள் நுதலிய வெள்ளடி யியலால்
திரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே." —தொல். செய். 147

"வெண்டளை தன்றளை என்றிரு தன்மையின்
வெண்பா இயலது வெண்கலி ஆகும்." —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 325)

86 "தரவே யாகியும் இரட்டியும் தாழிசை
சிலவும் பலவும் மயங்கியும் பாவே
றொத்தா ழிசைக்கலிக் கொவ்வா உறுப்பின
கொச்சகக் கலிப்பா ஆகும் என்ப." —அவிநயனார்
(விருத்தியுரை ப. 341)

### ஒத்த காரிகை இலக்கணம்

85 "வான்தளை தட்(டு)
இசைதன தாகியும் வெண்பா இயைந்தும்... ...
விசையறு சிந்தடி யால்இறு மாய்விடின் வெண்கலியே." (கா. 31)

86 "தரவே தரவிணை தாழிசை தாமும் சிலபலவாய்
மரபே இயன்று மயங்கியும் வந்தன ... ...
... ... கொண்ட வான்பெயர் கொச்சகமே." (கா. 32)

## கலிப்பாவினம்

### கலித்தாழிசை

87 அடிஎனைத் தாகியும் ஒத்துவந்(து) அளவினிற்
கடையடி மிகுவது கலித்தா ழிசையே.

### கலித்துறை

88 நெடிலடி நான்காய் நிகழ்வது கலித்துறை.

### கலிவிருத்தம்

89 அளவடி நான்கின கலிவிருத் தம்மே.

கலிப்பாவும் அதன் இனமும்
முற்றும்.

---

## ஒத்த முன்னை இலக்கணம்

87 " அந்தடி மிக்குப் பலசில வாய்அடி
தந்தமில் ஒன்றிய தாழிசை ஆகும். " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 349)

88 " ஐஞ்சீர் அடியின் அடித்தொகை நான்மையொ
டெஞ்சா தியன்றன எல்லாம் கலித்துறை. " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 350)

89 " நாலொரு சீரால் நடந்த அடித்தொகை
ஈரிரண் டாகி இயன்றவை யாவும்
காரிகை சான்ற கலிவிருத் தம்மே. " —காக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 352)

## ஒத்த காரிகை இலக்கணம்

87 " அடிவரை இன்றி அளவொத்தும் அந்தடி நீண்டிசைப்பிற்
கடிதலில்லாக் கலித்தாழிசை ஆகும். " (கா. 33)

88 " கலித்துறையே
நெடிலடி நான்காய் நிகழ்வது. " (கா. 33)

89 " நேரடி ஈரிரண்டாய்
விடினது ஆகும் விருத்தம். " (கா. 33)

# வஞ்சிப்பாவியல்

## வஞ்சிப்பா

90 தூங்கல் இசையன வஞ்சி மற்றவை
ஆய்ந்த தனிச்சொலோ(டு) அகவலின் இறுமே.

## வஞ்சிப்பாவினம்

### வஞ்சித்தாழிசையும் துறையும்

91 குறளடி நான்மையிற் கோவை மூன்றாய்
வருவன வஞ்சித் தாழிசை; தனிவரின்
துறையென மொழிப துணிந்திசி னோரே.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

*90 " தூங்கல் இசையாய்த் தனிச்சொற் சுரிதகம்*
*தான்பெறும் அடிதளை தழீஇவரை வின்றாய்*
*எஞ்சா வகையது வஞ்சிப் பாவே."* —அவிநயனார்
**(விருத்தியுரை ப. 357)**

*91 " குறளடி நான்கின் கூடின வாயின்*
*முறைமையின் அவ்வகை மூன்றிணைந் தொன்றி*
*வருவன வஞ்சித் தாழிசை ஆகும்."*

*" ஒன்றினை நான்மை உடைத்தாய்க் குறளடி*
*வந்தன வஞ்சித் துறையெனல் ஆகும்."* —காக்கைபாடினியார்
**(விருத்தியுரை ப. 360)**

**ஒத்த காரிகை இலக்கணம்**

*90 " வஞ்சி ...*
*... ... ... ஒலிமுறையே*
*... ... ... ...*
*நண்பா அமைந்த நலமிகு தூங்கல்."* (கா. 21)

*" தனிச்சொல்வந்து*
*மறைதலில் வாரத்தினால் இறும் வஞ்சி."* (கா. 34)

*91 " குறளடி நான்கின மூன்றொரு தாழிசை கோதில்வஞ்சித்*
*துறைஒரு வாது தனிவருமாய்விடின்."* (கா. 34)

### வஞ்சி விருத்தம்

92 சிந்தடி நான்காய் வருவது வஞ்சிய(து)
எஞ்சா விருத்தம் என்மனார் புலவர்.

வஞ்சிப்பாவும் அதன் இனமும்
முற்றும்.

### புறநடை

93 மிக்கும் குறைந்தும் வரினும் ஒருபுடை
ஒப்புமை நோக்கி ஒழிந்தவுங் கொளலே.

செய்யுளியல் முற்றும்.

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

92 " முச்சீர் நாலடி ஒத்தவை வரினே
வஞ்சி விருத்தம் என்றனர் கொளலே. " —சிறுகாக்கைபாடினியார்
(விருத்தியுரை ப. 362)

93 " ஒத்த அடியினும் ஒவ்வா விகற்பினும்
மிக்கடி வரினும் அப்பாற் படுமே. " — அவிநயனார்
(விருத்தியுரை ப. 368)

" பாவும் இனமும் மேவிய அன்றியும்
வேறுபட நடந்தும் கூறுபட வரினும்
ஆறறி புலவர் அறிந்தனர் கொளலே. " —மயேச்சுரர்
(விருத்தியுரை ப. 369)

**ஒத்த காரிகை இலக்கணம்**

92 " சிந்தடி நான்(கு)
அறைதரு காலை ... ... ... விருத்தம். " (கா. 34)

93 " ஒப்பும் குறிக்கொள். " (கா. 43)

" ஒப்பு என்பது மேல் சீரும், தளையும், அடியும் வரையறுக்கப் பட்ட பாவும், பாவினமும் சொன்ன பெற்றியில் திரிந்து, மிக்கும் குறைந்தும் வந்தால், அவை ஒருபுடை ஒப்புமை நோக்கி ஒழிந்த செய்யுட்களின் பாற்படுத்து வழங்கப்படும். "

காரிகையுரை (கா. 43)

## ஒழிபியல்

### தனிச்சொல் நிற்கும் இடம்

94 அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்; அஃது
இறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப.

### புறநடை

95 நிரல்நிரை முதலிய பொருள்கோட் பகுதியும்
அறுவகைப் பட்ட சொல்லின் விகாரமும்
எழுத்தல் இசையை அசைபொறுத் தியற்றலும்
வழுக்கா மரபின் வகையுளி சேர்த்தலும்
அம்மை முதலிய ஆயிரு நான்மையும்
வண்ணமும் பிறவும் மரபுளி வழாமைத்
திண்ணிதின் நடாத்தல் தெள்ளியோர் கடனே.

---

### ஒத்த முன்னை இலக்கணம்

*94* " *தனியே*
*அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்; அஃ(து)*
*இறுதியும் வஞ்சியுள் நடக்கும் என்ப.* " —*அவிநயனார்*
**(*விருத்தியுரை ப. 374*)**

" *உறுப்பிற் குறைந்தவும் பாக்கண் மயங்கியும்*
*மறுக்கப் படாத மரபின ஆகியும்*
*எழுவாய் இடமாய் அடிப்பொருள் எல்லாம்*
*தழுவ நடப்பது தான் தனிச் சொல்லே.* "

" *வஞ்சி மருங்கின் இறுதியும் ஆமெனக்*
*கண்டனர் மாதோ கடனறிந் தோரே.* " —*காக்கைபாடினியார்*
**(*விருத்தியுரை ப. 374*)**

95 —

### ஒத்த காரிகை இலக்கணம்

*94* " *பொருளோ(டு) அடிமுதல் நிற்பது கூன். அதுவே பொருந்தி*
*இருள் சேர்விலா வஞ்சி ஈற்றினும் நிற்கும்.* " (*கா. 43*)

*95* " *மருடீர் விகாரம் வகையுளி வாழ்த்து வசைவனப்புப்*
*பொருள்கோள் குறிப்பிசை ஒப்பும் குறிக்கொள் பொலங்கொடியே.* "
(*கா. 43*)

## சித்திரக்கவி மாலை

96 மாலை மாற்றே, சக்கரம், சுழிகுளம்,
ஏக பாதம், எழுகூற் றிருக்கை,
காதை கரப்பே, கரந்துறை பாட்டே,
தூசம் கொளலே, வாவ னாற்றி,
கூட சதுர்த்தம், கோமூத் திரியே,
ஓரெழுத் தினத்தால் உயர்ந்த பாட்டே,
பாத மயக்கே, பாவின் புணர்ப்பே,
ஒற்றுப் பெயர்த்தல், ஒருபொருட் பாட்டே,
சித்திரப் பாவே, விசித்திரப் பாவே,
விகற்ப நடைய வினாவுத் தரமே,
சருப்பதோ பத்திரம், சார்ந்த எழுத்து
வருத்தனம் மற்றும் வடநூற் கடலுள்
ஒருக்குடன் வைத்த உதாரணம் நோக்கி
விரித்து முடித்த மிறைக்கவிப் பாட்டே;
உருவக மாதி விரவியல் ஈறா
வருமலங் காரமும் வாழ்த்தும் வசையும்
கவியே கமகன் வாதி வாக்கியென்று
அவர்கள் தன்மையும் அவையின தமைதியும்
பாடுதல் மரபும் தாரணைப் பகுதியும்
ஆனந்தம் முதலிய ஊனமுஞ் செய்யுளும்
விளம்பனத் தியற்கையும் நரம்பின் விகற்பமும்
பண்ணும் திறமும் பாலையும் கூடமும்
எண்ணிய திணையும் இருதுவும் காலமும்
எண்வகை மணமும் எழுத்தும் சொல்லும்
செந்துறை மார்க்கமும் வெண்டுறை மார்க்கமும்
தந்திர உத்தியும் தருக்கமும் நடமும்
முந்துநூல் முடிந்த முறைமையின் வழாஅமை
வந்தன பிறவும் வயினறிந் துரைப்போன்
அந்தமில் கேள்வி ஆசிரி யன்னே.

*ஒழிபியல் முற்றும்.*

---

**ஒத்த முன்னை இலக்கணம்**

96 "மாலை மாற்றே, சக்கரம், சுழிகுளம்,
ஏக பாதம், எழுகூற் றிருக்கை,

[தொடர்ச்சி அடுத்த பக்கத்தில்]

(முன்பக்க ஒப்புமை இலக்கணத் தொடர்ச்சி)

காதை கரப்பே, கரந்துறை பாட்டே,
பாத மயக்கே, பாவின் புணர்ப்பே,
கூட சதுக்கம், கோமூத் திரியே,
ஓரினத்(து) எழுத்தால் உயர்ந்த பாட்டே,
ஒற்றுப் பெயர்த்தல், ஒருபொருட் பாட்டே,
சித்திரப் பாவே, விசித்திரப் பாவே,
விகற்ப நடையே, வினாவுத் தரமே,
சருப்பதோ பத்திரம், சார்ந்த எழுத்தே,
வருக்கமும் மற்றும் வட நூல் கடலுள்
ஒருக்குடன் வைத்த உதாரணம் நோக்கி
விரித்து மறைத்து மிறைக்கவிப் பாட்டுத்
தெரித்துப் பாடுவது சித்திர கவியே.

—திவாகர நிகண்டு
(நூற்பா எண் 2336.)

**திவாகர நிகண்டுக்குப் பிற்பட்ட ஒப்புமை:**

"மாலை மாற்றே சக்கரஞ் சுழிகுளம்
ஏக பாதம் எழுகூற் றிருக்கை
காதை கரப்பே கரந்துறை பாட்டே
தூசங் கொளலே வாவன் ஞாற்றே
பாத மயக்கே பாவின் புணர்ப்பே
கூட சதுக்கங் கோமூத் திரியே
ஓரெழுத் தினத்தா னுயர்ந்த பாட்டே
ஒற்றுப் பெயர்த்த ஒருபொருட் பாட்டே

சித்திரப் பாவே விசித்திரப் பாவே
விகற்ப நடையே வினாவுத் தரமே
சருப்பதோ பத்திரஞ் சார்ந்த வெழுத்தே
வருக்கமு மற்றும் வடநூற் கடலுள்
ஒருக்குடன் வைத்த உதாரணம் நோக்கி
விரித்து நிறைத்து மிறைக்கவிப் பாட்டுத்
தெரித்துப் பாடுவது சித்திர கவியே.

—பிங்கல நிகண்டு
**(நூற்பா எண் 368.)**

## ஒத்த காரிகை இலக்கணம்

**96 —**

**யாப்பருங்கலம் மூலமும்**
**ஒப்புமை இலக்கணப் பகுதிகளும்**
**முற்றின.**



## மூல நூற்பாக்களுக்கான

# பாடவேறுபாடுகள்

*[ சரசுவதி மகால் நூலகத் தமிழ்த்துறையில் இடம்பெற்றுள்ள 631, 636, 710, 1145 ஆகிய எண்ணிடப்பெற்ற நான்கு யாப்பருங்கல ஓலைச்சுவடிகளையும், யாப்பருங்கல நூலின் முற்பதிப்புகளான பவானந்தம்பிள்ளை பதிப்பு(1916), மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை பதிப்பு (1960). இரா. இளங்குமரன் பதிப்பு (1976) ஆகிய அச்சுநூல்களையும் ஒப்பிட்டு இவண் பாடவேறுபாடுகள் தொகுத்தளிக்கப்பெறுகின்றன. இந்நூற் பதிப்பு, பரவலாகப் பயன்பாட்டிலுள்ள இரா. இளங்குமரன் பதிப்பின் பாடங்களையே பின்பற்றியுள்ளது. ]*

| நூற்பா எண் | அடி, சீர் எண் | இந்நூற்பதிப்பின் பாடம் | பாடவேறுபாடு | பாடவேறுபாடுகள் இடம்பெற்றுள்ள சுவடிகளின் எண்கள், முன்னை அச்சுநூற் பதிப்புகளின் விவரம் |
|---|---|---|---|---|
| பாயிரம் | 1:1 | புழுதுல | மூதுல | 1145 |
| | 2:3 | செவ்விதின் | சென்னியின் | 631, 636 |
| சிறப்புப் பாயிரம் | 2:1, 2, 3 | அறிவனை வணங்கி அறைகுவன் | அறிவனை இறைஞ்சி அறைகுவன் | 710 |

| நூற்பா எண். | அடி, சீர் எண். | இந்நூற்பதிப்பின் பாடம் | பாடவேறுபாடு | பாடவேறுபாடுகள் இடம்பெற்றுள்ள சுவடிகளின் எண்கள், முன்னை அச்சுநூற் பதிப்புகளின் விவரம் |
|---|---|---|---|---|
| 2 | 4:3, 4 | தன்மைய வென்றா | தன்மை யென்றா | 636 |
| 3 | | 'தனிநிலை' எனத்தொடங்கும் நூற்பா உள்ளது | இந்நூற்பா இடம்பெறவில்லை | 710 |
| 4 | 1:3 | தாம்கெட | தான்கெட | 636 |
| 9 | 1:4 | இணையசை | நிரையசை | 631, 636 |
| | 2:2 | என்ப | என்பர் | 631, 636 |
| 11 | 2:2 | டென்ப | டென்பர் | 631 |
| 12 | 1:4 | நான்கனுள் | நான்கினும் | பவானந்தம்பிள்ளை பதிப்பு |
| 17 | 2:2 | மொழிப | மொழிவர் | 636 |
| 20 | 2:1 | நிரைவருங் | நிரைவரு | 631, 636 பவானந்தம் பிள்ளை பதிப்பு |
| 26 | 2:1, 2 | வஞ்சி நடக்கும் | வஞ்சியின் நடக்கும் | 636 |
| | | | வஞ்சியுள் நடக்கும் | 631 |
| 28 | 1:3 | அடியினும் | அடியின் | 710 |
| 33 | 1:2, 3 | அடியிரண்டு இயையத் | அடியிரண்டு அடியாய்த் | 631, 636 |

| நூற்பா எண் | அடி, சீர் எண் | இந்நூற்பதிப்பின் பாடம் | பாடவேறுபாடு | பாடவேறுபாடுகள் இடம்பெற்றுள்ள சுவடிகளின் எண்கள், முன்னை அச்சுநூற் பதிப்புகளின் விவரம் |
|---|---|---|---|---|
| 34 | 3:3, 4 | மிசையதூஉம் கீழதூஉம் | மேலதூங் கீழதூங் | 710 |
| | 4 : 1 | சீரிய | சீரியல் | 631, 636, 645 |
| 35 | 1:3, 4 | அடிதொறும் வரின்அடி | அடிதொறும் வரினே | 631, 636 |
| | 2 : | மோனைத் தொடையென மொழிமனார் புலவர் | அடிமோனைத் தொடை என்மனார் புலவர் | 631, 636, 710 |
| 36 | 1:2, 3, 4 | எழுத்தொன் றியைவதே எதுகை | எழுத்தொன்றி வருவ தெதுகை | 631, 636 |
| 39 | 2:2 | கூறுப | கூறும் | 631, 636 |
| | | | கூறுவர் | 645, 710 |
| 40 | 1:3, 4 | இயைபெனப் படுமே | இயைபென மொழிப | 645 |
| 42 | 1:1, 2 | இருசீர் மிசைவரத் | இருசீர் இணைவரத் | 631, 636 |
| | 1:3 | தொடுப்பது | தொடுப்பதை | பவானந்தம்பிள்ளை பதிப்பு |
| 44 | 1:1, 2 | சீரிரண்டு இடைவிடத் | சீரிரண்டு இடைவரத் | 636, 645 |
| 46 | 1:3, 4 | அல்லன மூன்றின் | அல்லன மூன்று | 710 |
| 47 | 1:4 | தொடுப்பது | தொடுப்பின் | பவானந்தம் பிள்ளை பதிப்பின் அடிக்குறிப்பு |

| நூற்பா எண் | அடி, சீர் எண் | இந்நூற்பதிப்பின் பாடம் | பாடவேறுபாடு | பாடவேறுபாடுகள் இடம்பெற்றுள்ள சுவடிகளின் எண்கள், முன்னை அச்சுநூற் பதிப்புகளின் விவரம் |
|---|---|---|---|---|
| 48 | 1:1, 2 | சீர்தொறும் தொடுப்பது | சீர்தொறும் நடப்பது | 631 |
| 49 | 1:2, 3, 4 | இரட்டையொ(டு) அந்தாதி எனவும் | இரட்டை யந்தாதியோ டேனவும் | 631, 636 |
| | | | இரட்டை அந்தாதி எனவும் | 645 |
| | 2:3 | வழங்குமன் | வழங்குமப் | 636 |
| 52 | 1:2 | முதலாத் | முதலாய்த் | 631, 636 |
| | | | முதல்வரத் | 645 |
| 53 | 2:3, 4 | மொழிந்திசிற் பெயரே | மொழிந்திசி னோரே | 631, 636 |
| 54 | 2: | பாவே பாவினம் எனஇரண்டாகும் | பாவே பாவின் றிறமிரண் டாகும் | 631, 636 |
| 55 | 1:3, 4 | கலியே வஞ்சிஎனப் | கலி வஞ்சி எனப் | 631, 636, 645 |
| 56 | 2:1, 2 | பாவினம் பாவொடு | பாவொடு பாவினம் | 631, 636, 710 |
| 57 | 2:2,3 | சிந்தடி ஆகலும் | சிந்தடி ஆகவும் | 631, 636 |
| | 3:2, 3 | அசைச்சீர் ஆகலும் | அசைச்சீர் ஆகவும் | 631, 645, 710 |

| நூற்பா எண் | அடி, சீர் எண் | இந்நூற்பதிப்பின் பாடம் | பாடவேறுபாடு | பாடவேறுபாடுகள் இடம்பெற்றுள்ள சுவடிகளின் எண்கள், முன்னை அச்சுநூற் பதிப்புகளின் விவரம் |
|---|---|---|---|---|
| 60 | 1:3, 4 | தனிஇரண் டாவதன் | தனிஇரண் டாய்அதன் | 631, 636 |
| | 2:1, 2 | ஈறுஒருஉ வாய்முற் | ஈறொரு வாய்முற் | பவானந்தம் பிள்ளை பதிப்பு |
| 61 | 1:1, 2, 3 | விகற்பொன் றாகியும் மிக்கும் | விகற்பமொன் றாகியும் மிக்கும் | 645 |
| | | | விகற்பமொன் றாகியும் மிகுந்த | 631, 636 |
| 64 | 1:1, 2 | அந்தடி குறைநவும் | அந்தடி குறைந்தவுஞ் | 710 |
| 67 | 3:1, 2 | வேற்றொலி விரவினும் | வேற்றொலி வரலும் | 636 |
| 68 | 1:1, 2 | நான்கடி யானும் | நான்கடி யாயினும் | 636 |
| | 2:1, 2 | தான்தனிச் சொற்கொளின் | தான்தனிச் சொற்பெறும் | 645 |
| 69 | 2:3, 4 | என்ஐஎன் றிறுமே | என்ஐஎன்ன விறுமே | 636 |
| 70 | 2:1, 2 | ஆகுமண் டிலமென்று | ஆகுமண் டிலமுமென்று | 631 |
| 72 | 1:3 | குறைந்திறல் | குறைதல் | 631, 636 |
| | | | குறைந்திடல் | 645 |
| | | | குறைந்திறின் | பவானந்தம் பிள்ளை பதிப்பு |

| நூற்பா எண் | அடி, சீர் எண் | இந்நூற்பதிப்பின் பாடம் | பாடவேறுபாடு | பாடவேறுபாடுகள் இடம்பெற்றுள்ள சுவடிகளின் எண்கள், முன்னை அச்சுநூற் பதிப்புகளின் விவரம் |
|---|---|---|---|---|
| | | | குறைந்திறின் | மே. வீ. வே. பதிப்பின் அடிக்குறிப்பு |
| 73 | 1:2, 3 | அடிமுத லாய்இறின் | அடிமுத லாயின் | 631 |
| 74 | 1:1, 2 | ஒத்த அடியின | ஒத்த அடியினது | பவானந்தம்பிள்ளை பதிப்பு |
| 75 | 1:3, 4 | முடிபின ஆய்விடின் | முடிவின வாயின் | 631, 636 |
| | | | முடிவின வாயிடின் | 645 |
| | | | முடிவின தாய்விடின் | 710 |
| | | | முடிவின வாய்விடின் | பவானந்தம்பிள்ளை பதிப்பு |
| | 2:3, 4 | றாழிசை ஆகும் | றாழிசை யாமே | ,, |
| 76 | 2:3, 4 | நான்கடி யாகி | நான்கடி யாகியும் | 631 |
| 77 | 2:1, 2 | அழியா மரபின் | அழியா மரபினது | பவானந்தம் பிள்ளை பதிப்பு |
| | 2:3, 4 | அகவல் ஆகும் | அகவல தாகும் | 645 |
| 78 | 1:2, 3 | இசையன கலிப்பா | இசையன கலியே | 631. 636, 645, 710 |
| 79 | 1:3, 4 | வெண்கலிப் பாவே | வெண்பாக் கலிப்பா | 631, 636 |

| நூற்பா எண் | அடி, சீர் எண் | இந்நூற்பதிப்பின் பாடம் | பாடவேறுபாடு | பாடவேறுபாடுகள் இடம்பெற்றுள்ள சுவடிகளின் எண்கள், முன்னை அச்சுநூற் பதிப்புகளின் விவரம் |
| --- | --- | --- | --- | --- |
| 81 | 2:3, 4 | பாற்படுத் தனரே | பகுத்துரைத் தனரே | பவானந்தம் பிள்ளை பதிப்பு |
| 82 | 1:3 | மூன்றும் | மூன்றாம் | மே. வீ. வே. பதிப்பு |
| | 2:1, 2 | தாவிற் சுருங்கித் | தரவிற் சுருங்கிப | 636 |
| | 4:2, 3, 4 | நேரிசை ஒத்தா ழிசையே | நேரிசை ஒத்தா ழிசைக்கலி | 631, 636, பவானந்தம் பிள்ளை பதிப்பு |
| 84 | 2:2, 3, 4 | வண்ணக ஒத்தா ழிசைக்கலி | வண்ணக ஒத்தா ழிசையே | 631, 636, 645 |
| 85 | 1:3 | தழீஇநின்று | தழுவிநின்று | பவானந்தம் பிள்ளை பதிப்பு |
| | 2:1, 2 | வெண்பா இயலது | வெண்பா வியல்வது | 636 |
| | 2:3, 4 | கலிவெண் பாவே | வெண்கலி யாகும் | 645 |
| 86 | 1,2 | தரவே தரவிணை தாழிசை தாமும் சிலவும் பலவும் சிறந்து மயங்கியும் | தரவே தரவிணை தாழிசை சிலபல வான முறைபிறழ்ந்து யபற்பா மயங்கியும் | 645 |
| | 4: | கொச்சகம் என்னும் குறியின ஆகும் | கொச்சகக் கலியின் குறிப்பின வாகும் | 631, 636 |
| 87 | 1:1, 2 | அடிஎனைத் தாகியும் | அடிஎனைத் தாயினும் | 631, 636 |

| நூற்பா எண் | அடி, சீர் எண் | இந்நூற்பதிப்பின் பாடம் | பாடவேறுபாடு | பாடவேறுபாடுகள் இடம்பெற்றுள்ள சுவடிகளின் எண்கள், முன்னை அச்சுநூற் பதிப்புகளின் விவரம் |
|---|---|---|---|---|
| 92 | 1:4 | வஞ்சியது | வஞ்சி | 631, 636 |
| 94 | 2:1, 2, 3 | இறுதியும் வஞ்சியுள் இயலும் | இடையினும் வஞ்சிக் கியலும் | 636, 710 |
| 95 | 3:3, 4 | அசைபெறுத் தியற்றலும் | அசைபெற வியற்றலின் | 710 |
| | 6:3, 4 | மரபுளி வழாமைத் | மரபினி வழாமை | 645 |
| | 7:1, 2 | திண்ணிதின் நடாத்தல் | திண்ணிதின் நடத்தல் | பவானந்தம் பிள்ளை பதிப்பு |
| | 7:3, 4 | தெள்ளியோர் கடனே | தெளிந்தோர் கடனே | 631, 636; 710 |
| | | | தெளிந்திசினோர் கடனே | பவானந்தம் பிள்ளை பதிப்பின் அடிக்குறிப்பு |
| 96 | 1:4 | சுழிகுளம் | சுரிகுளம் | 645 |
| | 5:1, 2 | கூட சதுர்த்தம் | கூட சதுக்கம் | 645, 710, பவானந்தம், பிள்ளை பதிப்பு, மே. வீ. வே பதிப்பின் அடிக்குறிப்பு. இளங்குமரன் பதிப்பின் அடிக்குறிப்பு |

| நூற்பா எண் | அடி, சீர் எண் | இந்நூற்பதிப்பின் பாடம் | பாடவேறுபாடு | பாடவேறுபாடுகள் இடம்பெற்றுள்ள சுவடிகளின் எண்கள், முன்னை அச்சுநூற் பதிப்புகளின் விவரம் |
|---|---|---|---|---|
| | 6:1, 2 | ஓரெழுத் தினத்தால் | ஓரினத் தெழுத்தால் | மே. வி. வே. பதிப்பின் அடிக்குறிப்பு, இளங்குமரன் பதிப்பின் அடிக்குறிப்பு. |
| | 9 : | சித்திரப் பாவே விசித்திரப் பாவே | சித்திரக் காவே விசித்திரக் காவே | 645, பவானந்தம் பிள்ளை பதிப்பு, மே. வி. வே. பதிப்பின் அடிக்குறிப்பு, இளங்குமரன் பதிப்பின் அடிக்குறிப்பு. |
| | | | சித்திரக் கரவே விசித்திரக் கரவே | 710 |
| | 10:1, 2 | விகற்ப நடைய | விகற்ப நடையே | பவானந்தம் பிள்ளை பதிப்பு |
| | 12:1 | வருத்தனம் | வருக்கமும் | 645 |
| | 18:1, 2 | அவர்கள் தன்மையும் | அவர்கவி யுண்மையும் | 710 |
| | 20:3, 4 | ஊனமும் செய்யுளும் | கானச் செய்யுளும் | 710 |
| | | | ஊனச் செய்யுளும் | பவானந்தம் பிள்ளை பதிப்பின் அடிக்குறிப்பு |
| | 22:2 | திறமும் | திறனும் | 645 |
| | 22:4 | கூடமும் | கூட்டமும் | 645, 710, பவானந்தம் பிள்ளை பதிப்பு. |

யாப்பருங்கல மூலத்தில் இடம்பெற்றுள்ள

# யாப்பிலக்கணக் கலைச்சொல் அகரநிரல்

யாப்பருங்கல மூலத்தில் இடம்பெற்றுள்ள

# யாப்பிலக்கணக் கலைச்சொற் பெயர்நிரல்

( பொருளடிப்படையில் )

# நூற்பா முதற்குறிப்பு அகரநிரல்



## பிற்சேர்க்கை

# யாப்பருங்கலக்காரிகை

### மூலம்

[ நூற்கண் இடம்பெற்றுள்ள மகடூஉ முன்னிலைத் தொடர்கள் தடித்த எழுத்தமைப்பில் காட்டப்பெற்றுள்ளன. ]

### தற்சிறப்புப் பாயிரம்

1 கந்தம் மடிவில் கடிமலர்ப் பிண்டிக்கண் ஆர்நிழற்கீழ்
எந்தம் அடிகள் இணையடி ஏத்தி எழுத்தசைசீர்
பந்தம் அடிதொடை பாஇனம் கூறுவன் **பல்லவத்தின்**
**சந்தம் மடிய அடியால் மருட்டிய தாழ்குழலே.**

### அவையடக்கம்

2 தேனார் கமழ்தொங்கல் மீனவன் கேட்பத்தெண் ணீரருவிக்
கானார் மலயத் தருந்தவன் சொன்னகன் னித்தமிழ்நூல்
யானா நடாத்துகின் றேன்என் றெனக்கே நகைதருமால்
ஆனா அறிவின் அவர்கட்கென் னாங்கொல்என் ஆதரவே.

3 சுருக்கமில் கேள்வித் துகள்தீர் புலவர்முன் யான்மொழிந்த
பருப்பொருள் தானும் விழுப்பொரு ளாம்பனி மால்மயப்
பொருப்பகஞ் சேர்ந்தபொல் லாக்கருங் காக்கையும் பொன்னிறமாய்
இருக்குமென்(று) இவ்வா(று) உரைக்குமன் றோஇவ் விருநிலமே.

## 1. உறுப்பியல்

### 1. எழுத்து

#### அசைக்கு உறுப்பாகும் எழுத்துகள்

4 குறில்நெடில் ஆவி குறுகிய மூவுயிர் ஆய்தம்மெய்யே
மறுவறு மூவினம் **மைதீர் உயிர்மெய் மதிமருட்டும்**
**சிறுநுதற் பேரமர்க் கட்செய்ய வாயைய நுண்ணிடையாய்**
அறிஞர் உரைத்த அளபும் அசைக்குறுப் பாவனவே.

## 2. அசை

5 குறிலே நெடிலே குறிலிணை ஏனைக் குறில்நெடிலே
நெறியே வரினும் நிரைந்தொற் றடுப்பினும் நேர்நிரையென்(று)
அறி**வேய் புரையுமென் தோளி** உதாரணம் ஆழிவெள்வேல்
வெறியே சுறா நிறம் விண்டோய் விளாம்என்று வேண்டுவரே.

## 3. சீர்

6 ஈரசை நாற்சீர் அகவற் குரியவெண் பாவினவாம்
நேரசை யாலிற்ற மூவசைச் சீர்நிரை யாலிறுப
**வாரசை மென்முலை மாதே** வகுத்தவஞ் சிக்குரிச்சீர்
ஓரசை யேநின் றுஞ் சீராம் பொதுவொரு நாலசையே.

7 தேமா புளிமா கருவிளம் கூவிளம் சீர்அகவற்(கு)
ஆமாம் கடைகாய் அடையின்வெண் பாவிற்(கு)அந் தம்கனியா
**வாமாண் கலையல்குல் மாதே** வகுத்தவஞ் சிக்குரிச்சீர்
நாமாண் புரைத்த அசைச்சீர்க்(கு) உதாரணம் நாள்மலரே.

8 தண்ணிழல் தண்பூ நறும்பூ நறுநிழல் தந்துறழ்ந்தால்
எண்ணிரு நாலசைச் சீர்வந் தருகும் இனிஅவற்றுட்
கண்ணிய பூவினங் காய்ச்சீர் அனைய கனியொடொக்கும்
ஒண்நிழற் சீர்அசைச் சீர்இயற் சீர்ஒக்கும் ஒண்தளைக்கே.

### உதாரண இலக்கிய முதனினைப்புச் செய்யுள்

9 குன்றக் குறவன் அகவல்பொன் னாரம்வெண் பாட்டுவஞ்சிக்(கு)
ஒன்றும் உதாரணம் பூந்தா மரைஎன்ப ஓரசைச்சீர்
நன்றறி வாரிற் கயவரும் பாலொடு நாலசைச்சீர்க்(கு)
அன்றதுஎன் னார்அள்ளற் பள்ளத்தி னோடுஅங்கண் வானத்துமே.

## 4. தளை

10 தன்சீர் தனதொன்றின் தன்தளை யாம்தண வாதவஞ்சி
வண்சீர் விகற்பமும் வஞ்சிக்(கு) உரித்துவல் லோர்வகுத்த
வெண்சீர் விகற்பங் கலித்தளை யாய்விடும் வெண்டளையாம்
ஒண்சீர் அகவல் உரிச்சீர் விகற்பமும் ஒண்ணுதலே.

### உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

11 திருமழை உள்ளார் அகவல் சிலைவிலங் காகும்வெள்ளை
மருளறு வஞ்சிமந் தாநிலம் வந்துமை தீர்கலியின்
தெரிவுறு பந்தம்நல் லாய்செல்வப் போர்க்குதக் கண்ணன்என்ப(து)
உரிமையின் கண்ணின்மை ஓரசைச் சீருக்(கு) உதாரணமே.

## 5. அடி

12 குறள்இரு சீரடி சிந்துமுச் சீரடி நாலொருசீர்
அறைதரு காலை அளவொடு நேரடி ஐயொருசீர்
நிறைதரு பாதம் நெடிலடி யாம்நெடு மென்பணைத்தோள்
கறைகெழு வேர்க்கணல் லாய்மிக்க பாதங் கழிநெடிலே.

### உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

13 திரைத்த இருது குறள்சிந்(து) அளவடி தேம்பழுத்து
விரிக்கும் நெடிலடி வேனெடுங் கண்ணிவென் றான்வினையின்
இரைக்கும் கணிகொண்ட மூவடி வோடுஇடங் கொங்குமற்றும்
கரிக்கைக் கவான்மருப் பேர்முலை மாதர் கழிநெடிலே.

### நான்கு பாக்களுக்கும் உரிய அடியின் சிறுமையும் பெருமையும்

14 வெள்ளைக்(கு) இரண்டடி வஞ்சிக்கு மூன்றடி மூன்(று)அகவற்(கு)
எள்ளப் படாக்கலிக்(கு) ஈரிரண் டாகும் இழி(பு)உரைப்போர்
உள்ளக் கருத்தின் அளவே பெருமைஒண் போதலைத்த
கள்ளக் கருநெடுங் கட்சுரி மென்குழற் காரிகையே.

### உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

15 அறத்தா றிதுவென வெள்ளைக்(கு) இழி(பு)அக வற்குஇழிபு
குறித்துஆங்(கு) உரைப்பின் முதுக்குறைந்(து) ஆம்குறை யாக்கலியின்
திறத்தா றிதுசெல்வப் போர்ச்செங்கண் மேதிவஞ் சிச்சிறுமை
புறத்தாழ் கருமென் குழல்திரு வேயன்ன பூங்கொடியே.

## 6. தொடை

16 எழுவாய் எழுத்தொன்றின் மோனை இறுதி இயைபுஇரண்டாம்
வழுவா எழுத்தொன்றின் மாதே எதுகை மறுதலைத்த
மொழியான் வரினும் முரண் அடி தோறும் முதன்மொழிக்கண்
அழியா(து) அளபெடுத்(து) ஒன்றுவ தாகும் அளபெடையே.

17 அந்தம் முதலாத் தொடுப்ப(து)அந் தாதி அடிமுழுதும்
வந்த மொழியே வருவது இரட்டை வரன்முறையான்
முந்திய மோனை முதலா முழுதும்ஒவ் வாதுவிட்டால்
செந்தொடை நாமம் பெறும்நறு மென்குழல் தேமொழியே.

### உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

18 மாவும்புள் மோனை இயைபுஇன் னகைவடி யோர்எதுகைக்(கு)
ஏவின் முரணும் இருள்பரந்(து) ஈண்(டு)அளவு ஆஅவளிய
ஓவில்அந் தாதி உலகுடன் ஆம்ஒக்கு மேஇரட்டை
பாவருஞ் செந்தொடை பூத்தஎன் றாகும் பணிமொழியே.

19 இருசீர் மிசைஇணை ஆகும் பொழிப்புஇடை யிட்டுஒரூஉவாம்
இருசீர் இடையிட்ட(து) ஈறிலி கூழை முதல்இறுவாய்
வருசீர் அயலில மேல்கீழ் வகுத்தமை தீர்கதுவாய்
வருசீர் முழுவதும் ஒன்றின்முற் றுஆமென்ப மற்றவையே.

### உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

20 மோனை விகற்பம் அணிமலர் மொய்த்துடன் ஆம்இயைபிற்(கு)
ஏனை எதுகைக்(கு) இனம்பொன்னி னன்ன இனிமுடிமேற்
கான விகற்பமுஞ் சீறடிப் பேர்அ(து) அளபெடையின்
தான விகற்பமுந் தாஅட்டாஅ மரையென்ப தாழ்குழலே.

உறுப்பியல் முற்றும்.

# 2. செய்யுளியல்

## 1. பாவுக்குரிய அடியும் ஓசையும்

21 வெண்பா அகவல் கலிப்பா அளவடி வஞ்சியென் னும்
ஒண்பா அடிகுறள் சிந்தென் றுரைப்ப ஒலிமுறையே
திண்பா மலிசெப்பல் சீர்சால் அகவல்சென் றோங்குதுள்ளல்
நண்பா அமைந்த நலமிகு தூங்கல் நறுநுதலே.

### உதாரண இலக்கிய முதல் நினைப்புக் காரிகை

22 வளம்பட என்பது வெள்ளைக்(கு) அகவற்(கு) உதாரணஞ்செங்
களம்படக் கொன்று கலிக்(கு)அரி தாயகண் ணார்கொடிபோல்
துளங்கிடை மாதே சுறமறி தொன்னலத் தின்புலம்பென்(று)
உளங்கொடு நாவலர் ஓதினர் வஞ்சிக்(கு) உதாரணமே.

## 2. வெண்பாவும் அதன் இனமும்

### குறள்வெண்பா, நேரிசைவெண்பா

23 ஈரடி வெண்பாக் குறள்குறட் பாஇரண் டாய்இடைக்கண்
சீரிய வான்தனிச் சொல்அடி மூய்ச்செப்ப லோசைகுன்றா(து)
ஓரிரண் டாயும் ஒருவிகற் பாயும் வருவதுண்டேல்
நேரிசை யாகும் நெறிசுரி பூங்குழல் நேரிழையே.

### இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா

24 ஒன் றும் பலவும் விகற்பொடு நான்கடி யாய்த்தனிச்சொல்
இன்றி நடப்பின் அஃ(து) இன்னிசை துன்னும் அடிபலவாய்ச்
சென்று நிகழ்வ பஃறொடை யாம்சிறை வண்டினங்கள்
துன்றுங் கருமென் குழற்றுடி யேரிடைத் தூமொழியே.

### சிந்தியல் வெண்பா, வெண்பாவின் இறுதியடி

25 நேரிசை இன்னிசை போல நடந்(து)அடி மூன்றின்வந்தால்
நேரிசை இன்னிசைச் சிந்தியல் ஆகும் நிகரில்வெள்ளைக்(கு)
ஓரசைச் சீரும் ஒளிசேர் பிறப்பும்ஒண் காசுமிற்ற
சீருடைச் சிந்தடி யேமுடி வாய்என்று தேறுகவே.

### குறள்வெண்செந்துறை, குறட்டாழிசை

26 அந்தமில் பாதம் அளவிரண்(டு) ஒத்து முடியின்வெள்ளைச்
செந்துறை யாகும் திருவே அதன்பெயர் சீர்பலவாய்
அந்தங் குறைநவும் செந்துறைப் பாட்டின் இழிபும்அங்கேழ்ச்
சந்தஞ் சிதைந்த குறளும் குறளினத் தாழிசையே.

### வெளிவிருத்தம், வெண்டாழிசை, வெண்டுறை

27 மூன்றடி யானும் முடிந்துஅடி தோறும் முடிவிடத்துத்
தான்தனிச் சொல்பெறும் தண்டா விருத்தம்வெண் டாழிசையே
மூன்றடி யாய்வெள்ளை போன்றிறும் மூன்றுஇழி(பு) ஏழுஉயர்வாய்
ஆன்றடி தாம்சில அந்தம் குறைந்துஇறும் வெண்டுறையே.

## 3. ஆசிரியப்பாவும் அதன் இனமும்

### நால்வகை ஆசிரியப்பா

28 கடையயற் பாதம்மூச் சீர்வரின் நேரிசை காமருசீர்
இடைபல குன்றின் இணைக்குறள் எல்லா அடியுமொத்து
நடைபெறு மாயின் நிலைமண் டிலம்நடு(வு) ஆதிஅந்தத்
தடைதரு பாதத்(து) அகவல் அடிமறி மண்டிலமே.

### ஆசிரியத்தாழிசை, துறை, விருத்தங்கள்

29 தருக்கியல் தாழிசை மூன்றுஅடி ஒப்பன நான்கடியாய்
எருத்தடி நைந்தும் இடைமடக் காயும் இடையிடையே
சுருக்கடி யாயும் துறையாம் குறைவில்தொல் சீர்அகவல்
விருத்தம் கழிநெடில் நான்குஒத் திறுவது மெல்லியலே.

## 4. கலிப்பாவும் அதன் இனமும்

### நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

30 தரவொன்று தாழிசை மூன்று தனிச்சொற் சுரிதகமாய்
நிரலொன்றின் நேரிசை ஒத்தா ழிசைக்கலி நீர்த்திரைபோல்
மரபொன்று நேரடி முச்சீர் குறள்நடு வேமடுப்பின்
அரவொன்றும் அல்குல்அஃ(து) அம்போ தரங்கவொத் தாழிசையே.

### வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, வெண்கலிப்பா

31 அசையடி முன்னர் அராகம்வந்(து) எல்லா உறுப்புமுண்டேல்
வசையறு வண்ணக ஒத்தா ழிசைக்கலி வான்தளைதட்(டு)
இசைதன(து) ஆகியும் வெண்சீர் இயைந்தும்இன் பான்மொழியாய்
விசையறு சிந்தடி யால்இறும் ஆய்விடின் வெண்கலியே.

### கொச்சகக் கலிப்பாவின் வகை

32 தரவே தரவிணை தாழிசை தாமும் சிலபலவாய்
மரபே இயன்றும் மயங்கியும் வந்தன வாங்கமைத்தோள்
அரவே ரகலல்கு லம்பேர் நெடுங்கண்வம் பேறுகொங்கைக்
குரவே கமழ்குழ லாய்கொண்ட வான்பெயர் கொச்சகமே.

### கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம்

33 அடிவரை இன்றி அளவொத்தும் அந்தடி நீண்டிசைப்பிற்
கடிதலில் லாக்கலித் தாழிசை ஆகும் கலித்துறையே
நெடிலடி நான்காய் நிகழ்வது நேரடி ஈரிரண்டாய்
விடின்அது ஆகும் விருத்தம் திருத்தகு மெல்லியலே.

## 5. வஞ்சிப்பாவினமும் வஞ்சிப்பாவிற்கீறாமாறும்

### வஞ்சித்தாழிசை, துறை, விருத்தம், அதன் ஈறு

34 குறளடி நான்கினை மூன்றுஒரு தாழிசை கோதில்வஞ்சித்
துறைஒரு வாது தனிவரு மாய்விடின் சிந்தடிநான்(கு)
அறைதரு காலை அமுதே விருத்தம் தனிச்சொல்வந்து
மறைதலில் வாரத்தி னால்இறும் வஞ்சிவஞ் சிக்கொடியே.

## 6. மருட்பா

35 பண்பார் புறநிலை பாங்குடைக் கைக்கிளை வாயுறைவாழ்த்(து)
ஒண்பாச் செவியறி(வு) என்றிப் பொருள்மிசை ஊனமில்லா
வெண்பா முதல்வந்(து) அகவல்பின் னாக விளையுமென்றால்
வண்பால் மொழிமட வாய்மருட் பாவெனும் வையகமே.

செய்யுளியல் முற்றும்.

# 3. ஒழிபியல்

### எழுத்துகள் அலகுபெறாதன, பெறுவன

36 சீரும் தளையும் சிதையின் சிறிய இஉ அளபோ(டு)
ஆரும் அறிவர் அலகு பெறாமைஐ காரநைவேல்
ஒரும் குறிலியல் ஒற்றா பாய்விடின் ஓரலகாய்
வாரும் வடமும் திகழும் முகிழ்முலை வாணுதலே.

37 விட்டிசைத்(து) அல்லால் முதற்கண் தனிக்குறில் நேரசையென்(று)
ஒட்டப் படா(து) அதற்கு உண்ணான் உதாரணம் ஓசைகுன்றா
நெட்டள பாய்விடின் நேர்நேர் நிரையொடு நேரசையாம்
இட்டத்தி னால்குறில் சேரின் இலக்கியம் ஏர்சிதைவே,

38 மாஞ்சீர் கலியுட் புகாகலிப் பாவில் விளங்கனிவந்(து)
ஆஞ்சீர் அடையா அகவ லகத்தும்அல் லாதஎல்லாம்
தாஞ்சீர் மயங்கும் தளையும் அஃதேவெள்ளைத் தன்மைகுன்றிப்
போஞ்சீர் கனிபுகில் புல்லா(து) அயற்றளை பூங்கொடியே.

### அடி மயக்கம்

39 இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாதம் அகவலுள்ளான்
மயக்கப் படாஅல்ல வஞ்சி மருங்கின்எஞ் சாஅகவல்
கயற்கணல் லாய்கலிப் பாதமும் நண்ணும் கலியினுள்ளால்
மயக்கப் படும்முதற் கால்இரு பாவும் முறைமையினே.

### முரண்தொடை — வகைகள்

40 அருகிக் கலியோ(டு) அகவல் மருங்கின்ஐஞ் சீரடியும்
வருதற்(கு) உரித்துஎன்பர் வான்தமிழ் நாவலர் மற்றொருசார்
கருதில் கடையே கடையிணை பின்கடைக் கூழையும்என்(று)
இணைத் தொடைக்கும் மொழிவர் இடைப்புணர் என்பதுமே.

### வருக்கம், நெடில் முதலான எதுகை மோனைகள்

41 வருக்கம் நெடில்இனம் வந்தால் எதுகையும் மோனையும்என்று
ஒருக்கப் பெயரான் உரைக்கப் படும்உயிர் ஆசுஇடை யிட்(டு)
இருக்கும் ஒருசார் இரண்டுஅடி மூன்றாம் எழுத்தும்ஒன்றி
நிரக்கும் எதுகைஎன் றாலும் சிறப்பில நேரிழையே.

### தரவு தாழிசைக்கு அடிவரையறை

42 சுருங்கிற்று மூன்றடி ஏனைத் தரவுஇரு மூன்றடியே
தரங்கக்கும் வண்ணக் கும்தரவு ஆவது தாழிசைப்பாச்
சுருங்கிற்று இரண்டடி ஓக்கம் இரட்டிச் சுரும்பிமிருந்
தரங்கக் குழலாய் சுருங்கும் தரவினில் தாழிசையே.

**கூன், விகாரம் முதலியன**

43 பொருளொ(டு) அடிமுதல் நிற்பது கூன் அது வேபொருந்தி
இருள்சேர் விலாவஞ்சி ஈற்றினும் நிற்கும் இனிஒழிந்த
மருள்தீர் விகாரம் வகையுளி வாழ்த்து வசைவனப்புப்
பொருள்கோள் குறிப்பிசை ஒப்பும் குறிக்கொள் **பொலங்கொடியே.**

44 எழுத்துப் பதின்மூன்(று) இரண்டசை சீர்முப்பது ஏழ்தளைஐந்(து)
இழுக்கில் அடிதொடை நாற்பதின் மூன்றுஐந்து பாஇனம்மூன்(று)
ஒழுக்கிய வண்ணங்கள் நூறுஒன்பது ஒன்பொருள் கோள்இருமூ
வழுக்கில் விகாரம் வனப்(பு)எட் டுயாப்புள் வகுத்தனவே.

**ஒழிபியல் முற்றும்.**

**யாப்பருங்கலக்காரிகை முற்றும்.**



## பிற்சேர்க்கை—2

# அமிதசாகரர்*

— மு. அருணாசலம்

## ஆசிரியர்

" அமிதசாகர முனிவர் செய்த நூல்கள் இரண்டு என்பது வரலாறு. இரண்டில் விரிந்த நூல் யாப்பருங்கலம்; சுருங்கிய நூல் யாப்பருங்கலக்காரிகை என்பது. இவர் காலத்துக்கு முன் மிகப் பலவான யாப்பிலக்கண நூல்கள் இருந்தன என்று இவர் நூல்களின் உரையால் அறிகிறோம்; ஆனால், அவற்றுள் ஒன்றும் இன்று வழக்கில இல்லை. நூல்கள் இறந்தன போலும்.

இவர் தீபங்குடி அருங்கலான்வயத்தைச் சேர்ந்தவரென்றும், 'வேளாள மரபினர் என்றும் கூறுவர். ஆதாரம் விளங்கவில்லை. இவ்விரண்டு நூல்களுள் யாப்பருங்கலம் முதலில் செய்யப்பட்டது. காரிகை பின்னால் செய்யப்பட்டது. இதைக் காரிகை உரைகாரர் பாயிரத்துள் " வேதத்திற்கு நிருத்தமும், வியாகரணத்திற்குக் காரிகையும் அவிநயர் யாப்பிற்கு நாலடி நாற்பதும் போல, யாப்பருங்கலமென்னும் யாப்பிற்கு அங்கமாய், அலங்காரமுடைத்தாகச் செய்யப் பட்டமையால், யாப்பருங்கலக்காரிகையென்னும் பெயர்த்து " என்று கூறுவதால் விளங்கும். இவ்வாசிரியர் பெயர் அமிர்தசாகரர் என்றும் அமுதசாகரர் என்றும் முதலில் வழங்கப்பெற்றது. 1916இல் யாப்பருங்கலம் அச்சிட்ட பவானந்தம் பிள்ளை அமிர்தசாகரர் என்றே பெயர் குறிப்பிட்டார். பிற்காலத்தில் காரிகை அச்சிட்டோரும்கூட அமுதசாகரர் என்றே எழுதினார்கள். ஆனால் யாப்பருங்கலத்தின் சிறப்புப் பாயிரப் பாடலின் இறுதி இருவரிகள் இவருடைய பெயரின் வடிவம் அமிதசாகரர் என்று நன்கு உணர்த்துகின்றன.

---

* இவண் பதிப்பிக்கப்பெற்றுள்ள யாப்பருங்கலத்தை இயற்றிய ஆசிரியரான அமிதசாகரர் குறித்து அறிஞர் மு. அருணாசலம் அவர்கள் எழுதிய அரிய இவ்வாய்வுரை அவர்தம் ' தமிழ் இலக்கிய வரலாறு—பதினோராம் நூற்றாண்டு ' (ப 109—115) எனும் நூலிலிருந்து பயன்பாடு, அருமை கருதி இங்கே எடுத்தளிக்கப்பெறுகின்றது.

துளக்கருங் கேள்வித் துகள்தீர் காட்சி
அளப்பருங் கடற்பெயர் அருந்தவத் தோனே

அளப்பரும்—அமிதம்; கடற்பெயர் — சாகரம்; அருந்தவத்தோன் — முனிவர் எனப்பொருள் அமைவது காண்க. இதைத் தெளிவுபடுத்தி முதன்முதலாக 1919இல் அனவரத விநாயகம்பிள்ளை அவர்கள் எழுதினார்.

வீரசோழிய உரைகாரரான பெருந்தேவனார் அலங்காரப்படல உரையில் "யாப்பருங்கலத்தின் இறுதிச் சூத்திரமாகிய சித்திரக் கவிமாலை கூறும் மாலை மாற்றே சக்கரம் சுழிகுளம் என்று அமிதசாகரனார் கூறியது காண்க" என்று எழுதுகிறார். இதனால் இந்நூலாசிரியரின் இயற்பெயர் தெளிவாகத்தெரிகிறது. (ஆனால் இங்கு இரண்டு இடங்களில் அமுதசாகரர் அமிர்தசாகரர் என்றுதான் பெயர் அச்சிடப்பட்டுள்ளது. ஏடு படித்தோர் அமுத - அமிர்த என்று எண்ணிக் கொண்டதனால் வந்த பிழை போலும்.)

அமிதசாகரருடைய ஆசிரியர் குணசாகரர் என்பவர். சிறப்புப் பாயிரத்துள் இவர் குணக்கடற் பெயரோன் என்று குறிப்பிடப்படுவதால் தெரிகிறது. இவர் குணசாகர பட்டாரகர் என்ற பெயரால் வழங்கிய ஆசாரியராவர் என்பது பின் வரும் காலக்குறிப்பினால் விளங்கும். அமிதசாகரர் அருகதேவனுக்கு வணக்கம் கூறி நூலைத் தொடங்குவதால், அவர் சைனர் என்று தெளிவு.

யாப்பருங்கலம் என்பது யாப்புக்கு அணிகலமாகிய ஒருநூல் என்றே பொருள்படும். ஆனால் ஆன்றோர், அருங்கலம் என்பது தீபங்குடியில் வாழ்ந்த சைன சமயத்துத் தனிக்குழுவாகிய அருங்கலான்வயம் என்று கூறியுள்ளனர். இதற்கு ஆதாரமில்லை. அமிதசாகரரே காரிகையும் செய்தார் என்பதை விருத்தியுரைகாரர் "இந்நூலுடையாரும் மாஞ்சிர் கலியுட்புகா என விளங்கக்கூறினார்" என்று காரிகை 38ஆம் பாடலை எடுத்துக்காட்டுவதால் தெளிவாக அறியலாம்.

**காலம்**

யாப்பருங்கலத்தின் இறுதிச் சூத்திரம், சித்திரக்கவி மாலையைச் சொல்லுகின்ற 'மாலைமாற்றே சக்கரம் சுழிகுளம்' என்ற 29 அடி கொண்ட நூற்பாவாகும். இது வீரசோழிய உரையுள் அப்படியே எடுத்தாளப்பட்டிருக்கின்றது. வீரசோழியமானது கி. பி. 1063—1070இல் அரசாண்ட வீரராசேந்திர சோழனுடைய ஆதரவில் செய்யப்பட்ட ஐந்திலக்கண நூல். இதற்கு உரைசெய்தார் ஒரு பெருந்தேவனார். இவர், தம் உரையைக் 'கடனாகவே நவின்றான்' என்று சிறப்புப் பாயிரத்துள் வருவதால், ஆசிரியரது மாணாக்கர் என்பது புலப்படும்.

இவர் காலம் 1080—1110 எனக்கொள்ளத்தகும். எனவே, யாப்பருங்கலத்தை இவர் மேற்கோள் காட்டுவதால் இந்நூல் காலத்தால் முற்பட்டது என்பது தெளிவு.

விசயாலயனால் தோற்றுவிக்கப்பட்ட சோழ மரபானது இராசராசன் காலத்தே மிக்க உன்னதமான நிலையையடைந்தது. அவன் காலத்தே நம்பி யாண்டார் நம்பி தோன்றித் தேவாரப்பதிகங்களை வெளிப்படுத்தி, சைவத் திரு முறைகளை வகுத்தார். அக்காலத்திலும், பின்னரும், சைன பௌத்த இலக்கண ஆசிரியர் சிலர் தோன்றியிருந்தார்கள். அக்காலப் பகுதியில் யாப்பருங்கலம் செய்த அமிதசாகரனார் தோன்றினார் என்பதற்கும் சில குறிப்புக்கள் சாசனங் களில் கிடைக்கின்றன.

மாயூரத்துக்கு அருகிலுள்ள பாடல்பெற்ற தலமாகிய திருநீடூர்க் கோயில் கல்வெட்டுக்கள் சில செய்திகளை உணர்த்துகின்றன. இக்கோயில் சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் புதுத் திருப்பணி செய்யப்பட்டது; செய்தபோது கோயில் சுவரில் கல்வெட்டுக்கள் அடங்கிய கற்கள் கலைக்கப்பட்டன. கலைப்ப தற்கு முன அங்கிருந்த கல்வெட்டுக்களைச் சாசன இலாகாவினர் பிரதிசெய்திருக் கிறார்கள். அவற்றுள் இரண்டு செய்யுள் வடிவத்தில் உள்ளன. அவை முதற் குலோத்துங்கள் ஆட்சிக் காலத்தில் (1070—1120) பொறிக்கப்பட்டவை. முதல் செய்யுட்சாசனம் அவனது 38 ஆம் ஆட்சியாண்டில் (1108) எழுந்தது.

எண்டிசை யுலகை ஒருகுடை நிழற்கீழ்
இருத்திய குலோத்துங்க சோழற்கு
யாண்டொரு முப்பத் தெட்டினிற் சோணாட்டு
இசைவளர் இந்தளூர் நாட்டுள்
உண்டைநீ டியநீ டூர்உமை யோடும்
உலாவிய சிவபெரு மானுக்கு
உவந்து வெண்கயிலை மலைஎனச் சிலையால்
உத்தம விமானமிங் கமைத்தான்
தண்டமிழ் அமித சாகர முனியைச்
சயங்கொண்ட சோழமண் டலத்துத்
தண்சிறு குன்ற நாட்டகத்து இருத்திச்
சந்தநூற் காரிகை அவனால்
கண்டவன் மருமான் காரிகைக் குளத்தூர்க்
காவலன் நிலாவினான் எவர்க்கும்

கருணையும் நீதியும் காட்டிய மிழலை
நாட்டுவேள் கண்டன் மாதவனே.[1]

இரண்டாவது சாசனம் சோழனது ஆட்சியாண்டு 46இல் (1116) எழுந்தது: சோழர்களுள் இவன் ஒருவனே இவ்வளவு நீண்டகாலம் ஆட்சி புரிந்தவன் ஆதலால், காலம் இக்குலோத்துங்கன் (1) காலம் என்பது தெளிவு.

ஆரிய உலகம் அனைத்தையும் குடைக்கீழ்
ஆக்கிய குலோத்துங்க சோழற்கு
ஆண்டொரு நாற்பத் தாறிடைத் தில்லை
அம்பலத் தேவட கீழ்ப்பால்
போரியல் மதித்துச் சொன்னவா றறிவார்
கோயிலும் புராணநூல் விரிக்கும்
புரிசை மாளிகையும் வரிசையால் விளங்கிப்
பொருப்பினால் விருப்புறச் செய்தோன்;
நேரியற்கு ஆண்டோ ரஞ்சுடன் மூன்றில்
நிகரிலாக் கற்றளி நீடூர்
நிலாவினாற் கமைத்த நிலாவினான் அமுத
சாகரன் நெடுந்தமிழ்த் தொகுத்த
காரிகைக் குளத்தூர் மன்னவன் தொண்டை
காவலன் சிறுகுன்ற நாட்டுக்
கற்பக மிழலை நாட்டுவே ளாண்மை
கொண்டவன் கண்டன்மா தவனே.[2]

---

1 இப்பாடலில் ஆசிரியர் பெயர் அமிதசாகரர் என்றிருப்பது காணத்தக்கது. மற்றப் பாடல் அமுதசாகரர் என்று கூறும்; கல்வெட்டினோர் பிழையாகும். இந்தவூர் நாடு ஆழ்வார் மங்களாசாசனம் பெற்று இப்போது திருவழுந்தூர் என வழங்கும் ஊரை உள்ளடக்கிய நாட்டுப்பகுதி.

2 செயங்கொண்ட சோழமண்டலம் தொண்டை மண்டலம். கண்டன் மாதவன் என்ற சிற்றரசன், அமிதசாகர முனியாற் காரிகை கண்டவன் மருமானும். காரிகைக் குளத்தூர்க் காவலனும், மிழலைநாட்டு வேளும் ஆவான். சிறுகுன்றநாடென்பது, இக்குளத்தூரை உள்ளடக்கிய பிரதேசமாகும். இது தொண்டை மண்டலத்து ஆமூர்க் கோட்டத்தில் உள்ளது. இவ்வூரில் அமிதசாகர முனிவர் தங்கியிருந்து காரிகை செய்ததனால், ஊருக்கே பின்னர் காரிகைக் குளத்தூர் என்ற பெயர் எழுந்தது. முதல் இராசேந்திரன் காலத்துக் காரிகைப் பேரூர் நாடு என ஒரு நாட்டின் பெயரும் சாசனங்களில் பயில்கிறது.

இவ்விரு பாடல்களும் அமிதசாகர முனியைக் குறித்த சில செய்திகளைத் தெரிவிக்கின்றன. இக் கண்டன் மாதவன், அமிதசாகர முனிவரைக் கொண்டு வந்து குளத்தூரில் இருக்கச் செய்து காரிகை பாடுவித்தவனுடைய வழித்தோன்றல்; மருமான் என்பது, இக்காலத்துப் போலன்றி, அக்காலத்து, சங்க இலக்கிய காலத்தில் உள்ளது போல, வழிவந்தவன் என்ற பொருளுடையது. இவன் முன்னோர் செயங்கொண்ட சோழ மண்டலமாகிய தொண்டை மண்டலத்தில் குளத்தூரில், சோழரின் கீழுள்ள தலைவர்களாய் வாழ்ந்தவர்கள். முனிவர் யாப்பருங்கலக் காரிகை பாடிய சிறப்பால், அவ்வூர் பின்னர்க் காரிகைக் குளத்தூர் என்ற பெயர் பெறுவதாயிற்று. இராசேந்திர சோழன் காலத்தில் காரிகைப் பேரூர் நாடு என்ற பெயர் வழங்கி வந்தமை தெரிவதால், அவன் காலத்துக்கு (1012—1044) முன்னமேயே காரிகை பாடப்பெற்று, இவனாலும் சிறப்புப் பெயர் பெற்றது என்பது தெளிவு. செயங்கொண்ட சோழன் முதல் இராசராசன் (985—1014). இவன் பெயராலேயே தொண்டை மண்டலம் செயங்கொண்ட சோழ மண்டலம் எனப்பட்டது. ஆதலால், இராசேந்திரனுக்கு முன்னதாக இராசராசன் காலத்தில்தான் இந்நூல் பாடப்பட்டிருத்தல் வேண்டும்.

மேலும், பாண்டியர் வரலாறொன்றால் அமிதசாகருடைய குருவாகிய குணசாகரர் என்று கருதத்தக்க குணசாகர பட்டாரகர் என்ற ஆசாரியர் வரலாறும் சிறிது தெரிகிறது. திருநெல்வேலி ஜில்லா கழுகு மலையில், மாறன் சடையன் என்ற பாண்டியனுடைய மூன்றாம் ஆட்சியாண்டில் எழுந்த சாசனங்களால் அக்காலத்தில் குணசாகர பட்டாரகர் என்ற சிறப்பு வாய்ந்த சைனமத ஆசாரியர் தமது சைன சித்தாந்தத்தைப் பரப்புவதற்காக, பிரசாரகர் சிலரை நியமித்து அவர்களுக்கு உணவளிக்கும் பொருட்டுப் பூதானம் பல செய்தார் என்று தெரிகிறது. அவரிடம் சீடர் பலர். இப்பாண்டியன் மூன்றாம் இராசசிம்ம பாண்டியன் புதல்வனாய், கி. பி. 946 முதல் 966 வரையில் அரசாண்ட வீரபாண்டியனாகலாம் என்பது அறிஞர் கருத்து. மேலும், அச்சாசனங்களில் வீரநாராயண ஏரி, உத்தம சிலன் என்ற பெயர்களும் காணப்படுகின்றன. வீரநாராயணன் என்பது 907—953 இல் ஆட்சி புரிந்த பராந்தக சோழனுக்கு உரிய பெயர். இவனுக்குப் பின் கண்டராதித்த சோழனையும் அரிஞ்சயனையும் கடந்து, 957 இல் பட்டமேற்ற இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழன் அவ்வீரபாண்டியனை வென்றவன். இவனுக்குப்பின் 970 இல் பட்டமேற்றவன் உத்தமசோழன் (970—985). இக்காலப் பகுதியில் குணசாகர பட்டாரகர் வாழ்ந்தார் என்றால், இவர் மாணாக்கரான அமிதசாகரர், அடுத்துப் பட்டமேற்ற

இராசராசன் (985—1014) காலத்தில் வாழ்ந்தார் என்பதும் பொருந்தக் கூடியதே. ஆதலால் நீடூர்ச் சாசனத்தால் வரையறுக்கப்படும் கால எல்லை இதற்கும் ஒத்திருப்பது தெரிய வரும். எனவே, அமிதசாகரர் காலமும் கி. பி. 1000—1014க்குள் அடங்கும் எனக் கருதுதல் பிழையாகாது.

பாடலில் கண்ட சொன்னவாறறிவார், சேரமான் பெருமாள். இவருக்குக் கோயிலும் புராண படனம் செய்வதற்கான மண்டபமும் சிறப்புறச் செய்தவன் வழிவந்தவனே கண்டன் மாதவன்.

**பாப்பருங்கலம்**

அருங்கலம் என்பது அரிய அணி. அமிதசாகரனார் இவ்வாறு அணி இலக்கணத்தின் பெயர் தோற்றுமாறு தம் யாப்பிலக்கணத்திற்குப் பெயர் அமைத்திருப்பது சுவையுடையது. அருங்கலம் என்று நூற் பெயர் அமைத்ததனாலேயே இவர் அருங்கலான்வயம் என்ற சைனக்குழுவினர் என்று எண்ணுவது அவசியமில்லை. ஏழாம் நூற்றாண்டில் அப்பர் சுவாமிகள் பாடிய நமசிவாயத் திருப்பதிகத்தில் பூவினுக்கு அருங்கலம் என்று தொடங்குகிற இரண்டாம் பாடல் நான்கு வரிகளிலும் அருங்கலம் என்று அமைத்திருப்பது அனைவரும் நன்கறிந்தது".

